[Sri C. Subramaniam] [16th March 1961

The report of the Privileges Committee on the Madras Corporation Case was presented to the House on 10th March 1961. I do not think any speech is necessary on this. The Committee has submitted its report and it has recommended that the matter be dropped after giving the reasons for arriving at such a conclusion. I hope the House would do well to accept the recommendation of the Committee of Privileges.

**Sri M. KALYANASUNDARAM:** கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் பிரேரேபித்த தீர்மானத்தை நானும் ஆதரிக்கிறேன். ஆரம்பத்தில் இது உரிமைக்குழுவிற்கு விடும்போது இதை ஆட்சேபித்ததில் நானும் ஒருவன். உரிமைக் குழு இதைப் பரிசீலனை செய்த பின்னால் நல்ல முடிவு வந்திருப்பதை நான் வரவேற்கிறேன். இந்த அறிக்கையில் கண்டிருக்கிற சில பிரச்னைகள் சரியல்ல என்று சுட்டிக்காட்டியதை நான் வரவேற்கிறேன். நான் ஆரம்பத்திலே இந்தத் தீர்மானத்தின் மீது பேசும்போது கார்பரேஷனில் உள்ளவர்கள் இந்தச் சபையை உண்மையிலேயே அவமதிக்கவேண்டுமென்ற உள்நோக்கே இல்லை என்பதை அவர்களே குறிப்பிட்டு ரத்து செய்திருப்பதானது பாராட்டத்தக்கது, வரவேற்கத்தக்கது. ஆனால் ஆளும் கட்சியினரானாலும் சரி, எதிர்க்கட்சியினரானாலும் சரி இதைக் குறுகிய நோக்கத்தோடு பார்க்கக்கூடாது.

The Hon. Sri C. SUBRAMANIAM: The hon. Member is again imputing motives to speeches made on the floor of the House. He just now pleaded that no motive should be attributed in the Press about speeches made by hon. Members on the floor of the House. I would request him to refrain from doing so. அவ்வளவு தூரம் போகவேண்டியதில்லை. . . .

**Sri M. KALYANASUNDARAM:** என்னுடைய கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் கார்பரேஷனிலேயும் இருக்கிறார்கள் அவர்களும் இதை ஆதரிக்கிறார்கள் என்றுதான் சொல்கிறேன். கார்பொரேஷன் எடுத்துக்கொண்ட நடவடிக்கையைப் பாராட்டு கிறேன். இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

Mr. SPEAKER: The question is—

"That the report of the Committee of Privileges (Madras Corporation case) be accepted."

The motion was put and carried.

## IV.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961–62—*cont.*

### (1) DEMAND VIII—HEAD OF STATE, MINISTERS AND HEADQUARTERS STAFF.

The Hon. Sri C. SUBRAMANIAM: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,28,19,200 under Demand VIII—Head of State, Ministers and Headquarters Staff."

16th March 1961]

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 1,28,19,200 under Demand VIII—Head of State, Ministers and Headquarters Staff."

I understand that the hon. Member Sri Anbazhagan is moving his cut motion (No. 230) under this demand. He may move it.

SRI K. ANBAZHAGAN : Sir, I move—

" That the allotment of Rs. 1,28,19,200 under Demand VIII—Head of State, Ministers and Headquarters Staff be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut motion moved—

" That the allotment of Rs. 1,28,19,200 under Demand VIII—Head of State, Ministers and Headquarters Staff be reduced by Rs. 100."

(2) DEMAND IX—STATE LEGISLATURE.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 11,85,000 under Demand IX—State Legislature."

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 11,85,000 under Demand IX—State Legislature."

I understand that the hon. Member Sri V. K. Kothandaraman is moving his cut motion under this demand. He may move it.

SRI V. K. KOTHANDARAMAN: என் பெயரில் வந்திருக்கக் கூடிய 243-வது வெட்டுப் பிரேரணையை பிரேரேபிக்கிறேன் :

" That the allotment of Rs. 11,85,000 under Demand IX—State Legislature be reduced by Rs. 100."

MR. SPEAKER : Motion moved—

" That the allotment of Rs. 11,85. 000 under Demand IX—State Legislature be reduced by Rs. 100."

(3) DEMAND X—ELECTIONS.

THE HON. SRI C. SUBRAMANIAM : On the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 41,67,400 under Demand X—Elections."

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 41,67,400 under Demand X—Elections."

I understand that the hon. Member Sri V. K. Kothandaraman is moving his cut motion under this Demand. He may move it now.

**SRI V. K. KOTHANDARAMAN:** என் பெயரில் வந்திருக்கக்கூடிய 245-வது வெட்டுப் பிரேரணையை பிரேரேபிக்கிறேன்.

"That the allotment of Rs. 41,67,400 under Demand X—Elections be reduced by Rs. 100."

**MR. SPEAKER:** Cut motion moved—

"That the allotment of Rs. 41,67,400 under Demand X—Elections be reduced by Rs. 100."

**SRI V. K. KOTHANDARAMAN:** கனம் சபாநாயகர் அவர்களே, இன்று நம் முன்னால் வந்திருக்கக்கூடிய மான்யத்தின் பேரில் நான் ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நமது அரசாங்கத்தின் நிர்வாகம், அமைச்சர்கள் இந்த சட்டசபையிலானாலும் சரி அல்லது வெளியிலே மக்களின் பிரச்னைகளை கவனிப்பதற்காக வேண்டி போகக்கூடிய நேரத்திலும் சரி அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள், எந்த அளவில் பிரச்னைகளை தீர்த்து வைக்கக்கூடிய முறையில் கவனம் செலுத்தி வருகிறார்கள் என்பதைப்பற்றியும் நாம் கவனிப்போமானால் ஏதோ கட்சிப் பிரசாரம் நடத்துவதற்காக வேண்டி இருக்கக்கூடிய நிலையில்தான் இருக்கிறதே தவிர மக்கள் பிரச்னைகளை தீர்த்து வைக்கக்கூடிய தன்மையில், ஒவ்வொரு பிரதேசங்களுக்கும் போகக்கூடிய நேரத்தில், அமைச்சர்களிடம் கொடுக்கப்படுகிற மனுக்களை கவனித்து அவைகளை தீர்த்துவைக்கக்கூடிய தன்மையில் இருக்கிறதா என்றால் உண்மையில் கிடையவே கிடையாது. போகக்கூடிய இடங்களில் அமைச்சர்கள் வருகிறார்கள் என்றால் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள், அமைச்சர்களை மற்றவர்கள் பார்ப்பதற்குக்கூட அனுமதிக்க முடியாத நிலையில்தான் இன்று நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. வேலூரில் அமைச்சர்கள் அடிக்கடி வரும் நேரத்தில் நாங்கள் போகிறோம் என்று சொன்னால் கூட வட ஆற்காடு ஜில்லா காங்கிரஸ் தலைவர் அவர்கள், அமைச்சர் அவர்களை பார்க்க அனுமதிப்பதில் கஷ்டப்படக்கூடிய அளவிற்குத் தான் நிலைமையிருக்கிறது. இப்படிப்பட்ட நிலை என்போன்றோருக்கே ஏற்பட்டிருக்கிறதென்றால் சாதாரண மக்கள், எதிர்க்கட்சிகளைச் சார்ந்தவர்கள் உண்மையில் எப்படி அமைச்சர்களைப் பார்க்க முடியும் என்று நினைத்துப் பார்க்கவேண்டும். உதாரணமாக சொல்வேன், வேலூருக்கு கனம் முதல் அமைச்சர் அவர்கள் வந்திருந்த போது நான் ஒரு முறை பார்ப்பதற்கு போயிருந்த சமயத்தில் வட ஆற்காடு ஜில்லா காங்கிரஸ் செயலாளர் அவர்கள், இப்பொழுது அவரை பார்க்க முடியாது, அவர் மிகவும் களைப்பாகயிருக்கிறார்கள், இப்பொழுது அவர்கள் வெளியே போகப்போகிறார்கள் என்று சொல்லிக்கொண்டு மற்ற காங்கிரஸ்காரர்களை உள்ளே போக அனுமதித்தார்கள். அப்பொழுது, இந்த இடத்தில் அவர்கள் அமைச்சர் என்ற ஹோதாவில் வந்திருக்கிறார்கள், அவரைக் கேட்டு

அவர் பார்க்க முடியாது என்று வேண்டுமானால் சொல்லட்டும், நான் போகத் தயார், அதில்லாது நீங்களே பார்க்க அனுமதிக்க முடியாது, பார்க்க முடியாது என்று சொன்னால் அது சரியல்ல, அப்படியானால் நானே உள்ளே போய்ப் பார்ப்பேன் என்று சொல்லிய பிறகு அவர் போய் அவரைக் கேட்டு பிறகு அனுமதிக்கக் கூடிய அளவிற்கு ஒரு நிலைமை ஏற்பட்டது. ஆக, இன்றையதினம் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களை ஒருவிதமாகவும், மற்றக் கட்சிக் காரர்களை ஒருவிதமாகவும் பார்க்கக்கூடாது என்ற எண்ணம் அமைச்சர்களுக்கு இருந்தபோதிலும்கூட, இன்று ஆளும் கட்சியைச் சார்ந்த எல்லோரையும் நான் சொல்லத் தயாராயில்லை, அதில் வசதி படைத்த ஒரு சிலர் அவர்கள் சுயநலத்திற்காக வேண்டி இப்படி பயன்படுத்துகிறார்கள். இதை எடுத்துச் சொல்லக் கூடிய நேரத்தில் நிதியமைச்சர் அவர்கள் சொல்லலாம், நாங்கள் எவ்வளவு நல்லது செய்தாலும் உங்கள் பார்வை இப்படியேதான் இருக்கும், நீங்கள் இப்படியேதான் சொல்லிக்கொண்டிருப்பீர்கள், நானும் இப்படியே சொல்லிக்கொண்டிருப்பேன் என்ற தன்மையில் பதில் சொல்லக்கூடும்.

MR. SPEAKER: ஒரு அங்கத்தினர் இன்னொரு அங்கத்தினரைப் பற்றி இழிவாகப் பேசக்கூடாது.

SRI V. K. KOTHANDARAMAN: இந்த சபையிலுள்ளவர்களைப்பற்றி, நடக்கிற பிரச்னைகளைப்பற்றி சொல்கிறேனே தவிர, நடக்காததைப்பற்றி சொல்லவில்லையே.

MR. SPEAKER: சட்டசபை அங்கத்தினர்களைப்பற்றி பேசக் கூடாதென்று சொன்னால் நடக்கிறதைச் சொல்கிறேன், நடக்காததைச் சொல்லவில்லை என்கிறீர்களே. அது தவறு. அப்படி சொல்லாதீர்கள்.

SRI V. K. KOTHANDARAMAN: அதேபோன்று . . .

MR. SPEAKER: என்ன மறுபடியும் "அதேபோன்று" என்று ஆரம்பிக்கிறீர்கள் (சிரிப்பு.)

SRI V. K. KOTHANDARAMAN: சர்க்கார் பல கமிட்டிகளை அமைக்கிறார்கள். ஜில்லா ஹரிஜன கமிட்டி, அல்லது மாகாண ஹரிஜன கமிட்டி, இதுபோன்று பல கமிட்டிகளை அமைக்கிறார்கள். ஜெயில் விஸிட்டேர்ஸ் நியமிக்கப்படுகிறார்கள். இப்படி பல கமிட்டிகள் அமைக்கப்பட்டு, அவைகளில் நியமனம் எப்படி நடத்துகிறதென்றால் அமைச்சர்கள் பாகுபாடு படுத்தக்கூடிய முறையில்தான், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களை மட்டும்தான் நியமிக்கக்கூடிய நிலையிலிருக்கிறதே தவிர மற்றபடி எல்லாக் கட்சியினர்களையும், எல்லாக் கட்சியினர்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கக்கூடிய அளவிற்கு கமிட்டிகள் அமைக்கக்கூடிய நிலை அறவே கிடையாது. இவைகளை கேட்கக்கூடிய நேரத்தில் சில சந்தர்ப்பங்களில் நிதியமைச்சர் அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், உங்களுக்கு இதன்பேரில் நம்பிக்கை கிடையாதே, அப்படியிருக்க உங்களைப்

போட்டு ஒரு பிரயோஜனமும் இல்லையே என்ற அளவில் பதில் கூறுகிறார்கள். ஹரிஜன முன்னேற்றத்திற்காக வேண்டி எல்லாக் கட்சியினரும் பாடுபடுகிறார்கள். ஆனால் ஹரிஜன முன்னேற்றக் கமிட்டி அமைப்பதில், ஏற்கனவேயிருந்த முறையைக்கூட மாற்றி திருத்தியமைக்கக்கூடிய அளவிற்கு இன்றையதினம் பலவிதங்களில் மாற்றுக்கட்சியினர்களுக்கு இடமேயில்லாத தன்மையில் இன்று நிலை இருந்துகொண்டுவருகிறது. அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது—சுற்றுப்பிரயாணம் செய்யக்கூடாதென்று நான் சொல்லவில்லை, தாராளமாக சுற்றுப்பிரயாணம் செய்யலாம், அப்படி சுற்றுப்பிரயாணம் செய்ய வருகிற நேரத்தில் —கலெக்டர் முதற்கொண்டு அத்தனை அதிகாரிகளும் அமைச்சர்களுக்குப் பின்னால் போகக்கூடிய நிலையிருப்பதால், ஏற்கனவே எங்கெங்கு சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும் எந்தெந்த காரியங்களை கவனிக்கவேண்டுமென்று ஒரு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது, அந்தத் திட்டங்கள் கைவிடப்பட்டு அமைச்சர்களின் பின்னால் போகக்கூடிய ஒரு நிலைதான் இருக்கிறது. ஒரு சில சந்தர்ப்பங்களில் அப்படி ஏற்படுவதால் தவறில்லை. சமய சந்தர்ப்பங்கள் அப்படி ஏற்படலாம். ஆனால் இப்படி அதிகாரிகள் அமைச்சர்களை பின்தொடர்ந்து செல்வதால் எந்த வேலையும் நடைபெறாத அளவிற்கு அதிகாரிகளின் வேலைகள் பாதிக்கக்கூடிய அளவிற்கு நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. அதன் காரணமாக நிர்வாகம் நல்ல முறையில் நடப்பதில்லை. அமைச்சர்கள் போகக்கூடிய நேரத்தில் கிராமம் கிராமமாக சூறாவளி சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டார்கள் என்று பத்திரிகைகளில் வந்து விட்டால் போதாது. ஜனங்கள் என்ன சொல்கிறார்கள், என்ன மகஜர்கள் கொடுக்கிறார்கள் என்பதைக் கொஞ்சம் காது கொடுத்து கேட்டு அப்பிரச்னைகளை தீர்த்து வைப்பதில் கவனம் செலுத்தக்கூடிய அளவில் நிலைமை இருக்கவேண்டும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரியப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். இந்த சந்தர்ப்பத்தில் ஒன்று ஞாபகப் படுத்த விரும்புகிறேன். பல பிரதேசங்களுக்கு ஒரே வாரத்தில் இரண்டு, மூன்று தடவைகள் போகக்கூடிய நிலைமை இருக்கிறது. நான் சொல்வது, குறிப்பிட்ட ஜில்லாவில் அல்லது தாலுகாவில் சுற்றுப்பிரயாணம் செய்வது என்று சொன்னால் போகக்கூடிய நேரத்தில் இரண்டு, மூன்று நாட்கள் ஒரேயடியாக இருந்து எங்கெங்கு சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும், எதை எதை கவனிக்கவேண்டும், எதை எதை தீர்க்கவேண்டுமென்பதில் வேண்டிய கவனம் செலுத்தினால் செலவு அதிகமாகாது. ஒரு வாரத்திலேயே, அல்லது இரண்டு வாரத்திற்குள்ளேயே பல முறைகள் திரும்பத் திரும்ப போகும் நிலைமை இருப்பதால் அதிகப்படியாக செலவு ஏற்படக்கூடிய நிலைமையும் இருக்கிறது. அதையும் அமைச்சர்கள் கணக்கிலே எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதையும் ஞாபகப்படுத்த ஆசைப்படுகிறேன்.

10 a.m. இன்றைக்கு 1,500 ரூபாய் வாங்கக்கூடிய அமைச்சர்களுக்கு இலவச மருத்துவ வசதியெல்லாம் இருக்கிறது. ஆனால் 150 ரூபாய் வாங்கக்கூடிய சட்டசபை உறுப்பினர்களுக்கு இன்றைக்கு

16th March 1961] [Sri V. K. Kothandaraman]

மருத்துவ வசதி மாத்திரமல்ல, இந்த 150 ரூபாயை இன்றைக்கு அலவன்ஸ் என்று சொல்லப்படுகிறது. ஸ்காலர்ஷிப் வாங்குவது என்று சொன்னால் இது ஒரு அலவன்ஸ் என்று உபயோகப்படுத்தப் படுகிறது. ஆனால் இதை மருத்துவ இலாகாவிலே வருமானம் என்ற அடிப்படையில் உபயோகப்படுத்தக்கூடிய நிலைமை இருக் கிறது. ஒரே பிரச்னையில் இரண்டு பாலிஸி இருக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகவே எல்லா எம்.எல்.ஏ-க்களுக்கும் இலவச முறையில் மருத்துவ வசதி அளிக்கவேண்டும். இல்லை யென்றால் எப்படி அலவன்ஸ் என்று கல்வி சம்பந்தப்பட்ட மட்டில் ஸ்காலர்ஷிப்பிற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ அதேபோன்று இதிலேயும் நாம் பார்ப்பது நல்லது. அந்த முறையில் திட்டம் வகுப்பது நல்லது என்று இந்த நேரத்திலே ஞாபகப்படுத்த ஆசைப்படுகிறேன்.

அமைச்சர்கள் மக்களுடைய பிரச்னைகள் எதுவாக இருந் தாலும், எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் பிரச்னைகள் நியாயமான பிரச்னைகளா என்பதைப் பார்த்து பிரச்னைகளைத் தீர்க் கக்கூடிய தன்மையில் சர்க்கார் கவனம் செலுத்தவேண்டுமென்று ரொம்பவும் வற்புறுத்தி இந்த நேரத்திலே ஞாபகத்திற்குக் கொண்டுவர ஆசைப்படுகிறேன்.

இன்றையதினம் ரைஸ் மில் லைசென்ஸ் இருக்கின்றன. பல ஆண்டுகாலமாக இதற்காக வேண்டி செக்ரடேரியட்டிற்கும் அல்லது கலெக்டர் ஆபீஸுக்கும் தாலுகா ஆபீஸுக்கும் சுற்றி அலையக்கூடிய அளவுக்கு இருக்கிறது. அதில் இருக்கும் பாலிஸியை கூடுமான வரையில் கொஞ்சம் தளர்த்தி உடனுக்குடன் கவனம் செலுத்தி லைசென்ஸ் வழங்க வேண்டுமென்று இந்த நேரத்தில் ஞாபகத்திற்குக் கொண்டுவர ஆசைப்படுகிறேன். காரணம், இன்று கைக்குத்தல் அரிசியை உபயோகப்படுத்தவேண்டுமென்று இருந்த போதிலும்கூட லைஸென்ஸ் வழங்கும் பிரச்னையில் லாப நஷ்டக் கணக்கு போட்டுப் பார்க்கும் அளவுக்கு சர்க்கார் கண்ணோட்டம் இருக்கிறது என்றால் அது வரவேற்க வேண்டியதுதான். பொது ஜனங்கள் பாதிக்கப்படுவார்களே, வியாபாரிகள் பாதிக்கப்படுவார் களே, வியாபாரம் கெடக்கூடாது, பொது மக்களும் கெடக்கூடாது என்ற அளவுக்கு அடிப்படை பிரச்னையில் அந்த மாதிரி கணக் கிட்டுப் பார்த்தால், அந்த மாதிரி ஒரு கொள்கையை கடை பிடித்தால் அது நல்லதுதான்—அதை ஒருவரும் மறுக்க முடியாது. ஆனால் ரைஸ் மில் லைஸென்ஸ் கொடுக்கும் பிரச்னையில் அவர்கள் கெட்டுப்போவார்கள் என்று லாப நஷ்டக் கணக்கு போட்டுப் பார்ப்பது சரியல்ல, முறையல்ல என்று இந்த நேரத்தில் ஞாபகப் படுத்த ஆசைப்படுகிறேன். எந்த அளவுக்கு அதிகப்படி லைஸென்ஸ் கொடுப்போமோ அதனால் பொது ஜனங்களுக்குத்தான் நன்மை ஏற்படும். ஒரு ரைஸ் மில் இருக்கும் இடத்தில் 4-5 மில்கள் இருந் தால் ஒரு மூட்டை நெல்லுக்கு 1 ரூபாய் என்று இருந்தால் 4 அணா,

8 அணுவில் நடக்கக் கூடிய அளவுக்கு ஆகும். (குறுக்கீடு) தொழிலாளிகளுக்கும் கிடைக்கக் கூடிய நிலைமை இருக்கும். இதனால் ஜனங்கள் பெரிய அளவுக்கு நன்மை அடையக் கூடியதாக இருக்கிறார்கள். இதில் பெரிய முதலாளிகள் ஒன்றும் கிடையாது. நாங்கள் எப்போதும் சாதாரண வசதி படைத்தவர்களை முதலாளிகள் என்று பார்ப்பது கிடையாது. இன்றைய தினம் பெரிய முதலாளிகளுக்கு தாராளமாக லைஸென்ஸ் வழங்கக் கூடிய நிலைமை இருக்கிறது. அடித்தட்டில் இருக்கும் மத்திய தர வகுப்பினருக்குத்தான் உடனுக்குடன் கொடுக்கும் நிலைமை இல்லை. மத்திய தர வகுப்பினருக்கு தொல்லை கொடுக்காத அளவுக்கு கவனம் செலுத்தப்படவேண்டும் என்று இந்த நேரத்தில் தெரிவித்துக்கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்ளுகின்றேன், வணக்கம்.

* **Sri J. MATHA GOWDER:** கனம் சபாநாயகர் அவர்களே, அமைசசர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர்கள் அடிக்கடி ஜில்லாக்களிலே சுற்றுப்பிரயாணம் செய்வதைபற்றி ஏனோ எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பயந்து கொள்ளுகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது எனக்கு ஒன்றும் புரியவில்லை. அமைச்சர்கள் ஜில்லாவிற்கு வந்தால் என்ன பயம் இவர்களுக்கு என்றால் காங்கிரஸ் கட்சி பலப்பட்டுவிடும் என்பதுதான். அமைச்சர்கள் வரும்போது காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் மாத்திரம் குறைகளை எடுத்துச் சொல்வதில்லை. எதிர்க்கட்சிகளில் இருக்கும் அங்கத்தினர்களும் அவர்களுக்கு இருக்கும் குறைகளை எடுத்துச் சொல்ல வாய்ப்பு இருக்கிறது. அங்கத்தினர்கள் வருவதற்குக்கூட சில இடைஞ்சல் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள் எந்த நிலையில் இடைஞ்சல் இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை. எந்த அமைச்சரிடத்தில் எந்த அங்கத்தினர் பார்ப்பதற்கு இடைஞ்சல் ஏற்பட்டது என்று அவர்களால் சொல்ல முடியாது—பேச்சுக்கு சொல்லலாம். அமைச்சர்கள் வருவதிலே நமக்கு ஒரு சௌகரியம் இருக்கிறது. நமது தொகுதியில் இருந்துகொண்டு அமைச்சருக்கு ஒரு விண்ணப்பத்தைக் கொடுக்கும்போது—சாதாரணமாக அதிகாரிகளிடத்தில் அனுப்பினால் ஏதாவது ஒரு குறையைச் சொல்லி ரிஜெக்ட் செய்து விடுவார்கள், ஆனால் நேரடியாகக் கொடுக்கும்போது—அமைச்சர்கள் அதிகாரிகளைக் கேட்டு அவர்கள் ஏதாவது சொன்னாலும், அதனுடைய அவசியத்தை உணர்ந்து, இப்படி ஏன் போக்கக்கூடாது என்று ஸ்தலத்திலேயே விவாதித்து, நல்ல முடிவு ஏற்படும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் நான் குறைபட்டுக்கொள்வது எங்கள் ஜில்லாவிற்கு அமைச்சர்கள் வருவதில்லையே என்பதுதான். குறிப்பாக நிதி அமைச்சர் பேரிலும், முதல் அமைச்சர் பேரிலும் எனக்கு ரொம்பவும் வருத்தம். அவர்கள் நீலகிரிக்கு வருவதே கிடையாது. அவர்கள் அடிக்கடி நீலகிரிக்கு சுற்றுப்பிரயாணம் செய்து மக்களுக்கு இருக்கும் குறைகளைப் போக்கவேண்டுமென்று மிகவும் பணிவன்போடு

16th March 1961] [Sri J. Matha Gowder]

கேட்டுக்கொள்கிறேன். எல்லா வேலைகளையும் ஹெட்க்வார்ட்டர் ஸில் இருந்து செய்து விட்டால் போதாது என்று நினைக்கிறேன். ஆகவே அமைச்சர்கள் அடிக்கடி ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

அடுத்தபடியாக நீலகிரி ஜில்லாவிலே கோடை காலத்தில் சட்ட சபைக் கூட்டத்தை நடத்தவேண்டுமென்று நான் முதலில் கேட்டேன். கேட்டதற்கு மற்றக் கட்சிகளில் இருக்கிறவர்களும் ஆதரவு கொடுத்து ஒரு வருஷம் நடத்தினோம். அப்படி நடத்தும் போது ஒரு கட்சிக்காரர்கள் மாத்திரம் ஏதோ ஏகப்பட்ட மக்கள் பணம் விரயமாகிவிட்டது என்று கூப்பாடு போட்டுவிட்டார்கள். பிறகு கேள்வி நேரத்தில் அமைச்சர் அவர்கள் என்ன சொல்லி யிருக்கிறார் என்று பார்த்தால் நீலகிரியில் சட்டசபைக் கூட்டத்தை நடத்தியதில், இங்கு நடக்கும்போது என்ன செலவு ஏற்பட்டிருக் குமோ அந்தச் செலவை விட ரூ. 10,000 தான் அதிகமாக ஆகியிருக் கிறது என்று தெரிவித்திருக்கிறார்கள். ரூ. 10,000 சர்க்கார் பணம் நீலகிரி ஜில்லாவில் செலவானால் அந்தப் பணம் நீலகிரி மக்களுக் குத்தான் போயிருக்கிறது என்பதைப் பரிசிலனை செய்து பார்க்க வேண்டும். 10,000 ரூபாய் என்று அங்கத்தினர்களுக்கு அதிகமாகக் கொடுத்த படியை வைத்துக்கொண்டு சொன்னாலும் அங்கத்தினர் கள் அவர்களுடைய பணத்தை நீலகிரியிலே செலவழித்திருக்கிறார் கள். அதோடு கூட சட்ட சபை நடந்தபோது பக்கத்திலிருந்து— மைசூரிலிருந்து, கேரளத்திலிருந்து—மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அவர்களுடைய பணத்தையும் நீலகிரியில் செலவு செய்திருப் பதைப் பார்த்தால் 1 லட்சம் ரூபாய் அளவுக்கு வேறு மாநிலத்தி லிருந்து வந்திருக்கிறது என்பதைப் பார்க்கும்போது 10,000 ரூபாய் செலவு செய்வது பெரிய காரியம் என்று நினைப்பது அவ் வளவு உசிதமாக இருக்காது. அடுத்தபடியாக பார்க்கும்போது அங்கத்தினர்களுக்கு வசதிக் குறைவு ஏற்பட்டு விட்டது என்று கேள்விப்படுகிறேன். வசதிக் குறைவு இல்லாமல் இருக்க வசதி களை ஏற்படுத்தி அடுத்த முறை சட்ட சபைக் கூட்டத்தை நடத்த சர்க்கார் முன்வரவேண்டும்—அதோடு எதிர் கட்சிகளெல்லாம் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அன்றைக்குத் தான் உருளைக் கிழங்கிற்கு வரி போட்டுவிட்டு ஊட்டிக்கு ஒரு உல்லாசமா என்று கேட்டார்கள். இப்போதுதான் வரியை எடுத்து விட்டா யிற்றே, ஆகையால் ஊட்டிக்கு வாருங்கள். அன்றைக்கு கும்பி எரியுது, குடல் கருகுது, கோலேந்திகளே, உங்களுக்கு குளு குளு வாசமா என்று கேட்டார்கள். இப்போது கும்பி எரிச்சல் அடங்கி இருக்கும் என்று நினைக்கிறேன்.

இப்போது வரிகளை எல்லாம் எடுத்தாய் விட்டது. அந்த மக்க ளுக்கு அநேக வசதிகளை எல்லாம் செய்து கொடுத்திருக்கிறோம் என்ற புள்ளிவிவரங்களை எல்லாம் அமைச்சர் அவர்கள் கொடுத் தார்கள். இப்போது உங்களுடைய கும்பி எரிவது எல்லாம்

நின்று இருக்கும் என்று நம்புகிறேன். இனிமேலாவது நீங்கள் மறுபரிசீலனை செய்து இந்தச்சட்டசபை எங்கள் பகுதியில் கூடுவ தற்கு எந்தவிதமான தடங்களும் ஏற்படுத்தாமல் இருக்க வேண்டும் என்று எதிர்கட்சி நண்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன். ஆகவே எதிர்க்கட்சிகள் எல்லாம் சர்க்கார் செய்யக்கூடிய காரியங் களுக்கு இடைஞ்சலாக உண்மைக்குப் புறம்பான காரியங்களை மக்களிடத்தில் எடுத்துச்சொல்லி தங்களுடைய கட்சி வளர வேண்டும் என்கின்ற ஒரே நோக்கத்தோடு பிரச்சாரத்தை செய்து கொண்டிருக்கக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே அங்கிருக்கின்ற மக்களுடைய நலனை கருதியாவது சட்டசபை கூட வேண்டும் என்று தீர்மானிக்கும்போது அதற்கு ஆதரவு கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சர்க்காரும் மீண்டும் சட்டசபையை ஊட்டியில் நடத்துவதற்கு மறுபரிசிலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது இல்லாவிட் டாலும் இனிமேல் 62-வது வருடத்தில் வரும் புதிய சட்டசபையை யாவது அங்கு நடத்துவதற்கு முயற்சிக்கவேண்டும். வரப்போகிற தேர்தலில் காங்கிரஸ் கட்சிதான் வெற்றி பெறப்போகிறது. காங் கிரஸ் தான் மந்திரிசபை அமைக்கப்போகிறது. எதிர்கட்சி என் பதே அனேகமாக இருக்காது என்று நினைக்கிறேன். அந்த அள வுக்கு இன்றைக்கு நாட்டில் மக்களிடத்தில் எண்ணங்கள் வளர்ந் திருக்கின்றன. இந்த நிலையில் வரக்கூடிய சட்டசபையில் எதிர் கட்சிகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நீலகிரியில் சட்ட சபையை நடத்துவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். (ஸ்ரீ ஏ. வி. பி. ஆசைத்தம்பி: அடுத்த தாக, காங்கிரஸ் தான் எதிர்கட்சியாக வரப்போகிறது.) எல்லாமே காங்கிரஸ் கட்சியாகத்தான் இருக்கப்போகிறது.

அடுத்ததாக, தொகுதிகளைப் பிரிக்கின்ற பொறுப்பு மத்திய சர்க்காரைச் சேர்ந்தது என்றிருந்தாலும் கூட, எலெக்ஷன்ஸ் என்ற பிரிவில், மலைப்பிரதேசங்களில் தொகுதிகளைப்பிரிக்கும் போது மிகவும் கவனமாக பிரிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். உதாரணமாக என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால், மலைப் பிரதேசங்களில் வண்டிகள் கூட போகமுடியாத இடங்களை எல்லாம் சேர்த்து, சுமார் 92,000 வோட்டர்கள் கொண்ட ஒரு தொகுதியை ஒரு ஸிங்கிள் மெம்பர் தொகுதியாக பிரித்திருக்கிறார் கள். மக்கள் தொகை மிகவும் கூடுதலாக இருக்கின்ற இம்மாதிரி தொகுதிகளை ஏற்படுத்தக்கூடாது. ஆகவே மக்கள் குறைவாக இருக்கும்படியான அளவில் தொகுதிகளை பிரிக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சட்டசபை அங்கத்தினர்களுக்கு இருக்கக் கூடிய வசதிகளைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். ஹாஸ்டலிலிருந்து இங்கு சட்டசபை நடக்கின்ற இடத் திற்கு பஸ்ஸில் வரும்போது 13 ந.பை. கேட்கிறார்கள். இது மிக வும் கஷ்டமாக இருக்கிறது. வேண்டுமென்றால் எங்களுக்குக்

16th March 1961] [Sri J. Matha Gowder]

கொடுக்கப்படும் சம்பளத்திலோ அல்லது டி. ஏ. பணத்திலோ இதை வசூலித்துக் கொள்ளலாம். அப்படியில்லாமல் ஒவ்வொரு சமயத்திலும் கண்டக்டர்கள் வந்து 13 ந.பை. கொடுங்கள் என்று கேட்பது எங்களுக்கு மிகவும் வருத்தமாய் இருக்கிறது. வேண்டு மென்றால் ஒரு நாளுக்கு இவ்வளவு என்று பஸ்ஸுக்கு காண்டிராக்ட் என்ற முறையில் கொடுத்துவிடுங்கள், அப்படி செய்தாலும் நல்லது. ஆகவே இதைப் பற்றி ஏதாவது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

டிஸ்ட்ரிக்ட் அட்மினிஸ்ட்ரேஷனைப் பொறுத்தவரையில், இப்போது ஜில்லா போர்டில் இருக்கும் காரியதரிசிகளை எல்லாம், இனி மேல் வரவிருக்கின்ற டிஸ்ட்ரிக்ட் டெவலப்மெண்ட் கவுன்ஸிலில் நியமித்துவிடலாம், அல்லது கலெக்டர்களின் பி.ஏ. என்ற முறையில் நியமித்து விடலாம். அப்போது தான் ஜில்லா நிர்வாகம் நல்ல முறையில் நடைபெற முடியும், என்பதை தெரிவித்துக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. SUBBIAH: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தின் பேரில் வந்திருக்கக்கூடிய—1 கோடி, 28 ஆயிரத்தி 19 லட்சம் ரூபாய்க்கு கேட்டிருக்கின்ற தீர்மானத்திற்கு எதிராக கொடுத்திருக்கும்—வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். பொதுவாக சில மதிப்பிற்குரிய நண்பர்கள் பேசும்போது, கழிந்த கால சரித்திரத்தை மறந்து விட்டு பேசுகிறார்கள் என்று தான் நான் நினைக்கிறேன். எந்த அரசியல் கட்சி ஆட்சிக்கு வரப்போகிறது என்பது மக்களுடைய கையில் தான் இருக்கிறது. யார் வரப் போகின்றார்கள், யார் வரமாட்டார்கள் என்பதை இப்போதே அறுதியிட்டு கூறுவது, சென்ற கால சரித்திரம் தெரியாமல் கூறுவது என்றுதான் எடுத்துக்கொள்ள முடியும். அமைச்சர்களுக்கு இன்றைக்கு இருக்கக்கூடிய வசதிகள், கார் வசதி, பங்களா வசதி, சம்பளம் இவைகள் எல்லாம் இருக்க வேண்டியது மிகமிக அவசியம். ஆனால் அவர்கள் அடிக்கடி தேர்தல் பிரச்சாரங்களுக்காக சென்று விடுகின்றார்கள் என்ற குறை மக்களிடையே இருந்து கொண்டிருக்கிறது. அமைச்சர்கள் அடிக்கடி சுற்றுப்பிரயாணம் செய்கின்றார்கள் என்று அடிக்கடி மக்களாலும், சட்டமன்ற அங்கத்தினர்களாலும் பேசப்படுகின்றது. இதனால் அதிக பணச்செலவு ஏற்படுகிறது என்பதால் குறைபடவில்லை, ஆனால் நிர்வாகத்தில், இவர்கள் தலைநகரில் இல்லாது இருப்பதால் நிர்வாகத்தில் ஊழல் இருக்கிறது, நிர்வாகத்தில் லஞ்சம் மலிந்து கிடக்கிறது என்றெல்லாம் பேசப்படுகிறது, அவைகளை நல்ல முறையில் கவனிப்பதற்கு வழியில்லாமல் இருக்கிறது என்பதால் தான் இவ்விதம் குறைபடுகிறார்கள். ஜில்லா தலைநகரங்களிலும் சரி, தாலுகா தலைநகரங்களிலும் சரி, ஏதாவது அமைச்சர் வந்து விட்டால், அங்குள்ள கலெக்டர், ஆர். டி. ஓ., தாசில்தார், போலீஸ் இலாகா அதிகாரிகள், இவர்கள் எல்லாம் அமைச்சர் அவர்களின் பின்னால் போக வேண்டி

[Sri V. Subbiah] [16th March 1961

யிருக்கிறது. இதையாவது உடனடியாக தவிர்க்கவேண்டும். இதன் காரணமாக ஜில்லாவில் நிர்வாகம் தடைபடுகிறது, தாலுகாவிலும் நிர்வாகம் தடைபடுகிறது. பல அதிகாரிகளிடம் எங்கள் ஃபைல் என்னவாயிற்று என்று கேட்கும்போதெல்லாம், அதை இன்னும் கவனிக்கவில்லை, அடுத்த வாரம் வாருங்கள் என்று சொல்லுகிறார்கள், ஏன் என்று கேட்டால், அடிக்கடி அமைச்சர்கள் வருகிறார்கள், அதன் காரணமாக நேரம் கிடைக்கவில்லை, அதனால் அந்த ஃபைலை பார்க்க முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். இந்த மாதிரியாக ஏன் குறை சொல்லுகிறேன் என்று சொன்னால் நிர்வாகத்தில் உடனடியாக தவிர்க்கப்பட வேண்டிய சில நிகழ்ச்சிகள், பல இடங்களில் நடக்கின்றன என்பதை அமைச்சர் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அங்கத்தினர்களின் ஹாஸ்டலைப்பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். நான் உண்மையிலே ஒரு கிராம வாசி. நான் காற்றோட்டமான இடத்தில் இருக்கக்கூடியவன். ஆனால் இப்போது ஹாஸ்டலில் எப்படியிருக்கிறது என்றால், வெறும் மூட்டையும் ஒலுங்குமாக இருக்கிறது. மின்சார விசிறியை மட்டும் தான் காற்றுக்காக பயன்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. இதனால் பகலிலும் தூங்க முடியவில்லை, இரவிலும் தூங்க முடியவில்லை. இந்த முறையில் எங்களது ஹாஸ்டலில் வசதிகள் மிகவும் குறைவாக இருக்கின்றன. மைசூர், சண்டிகார் போன்ற இடங்களிலுள்ள ஹாஸ்டலை எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு அறையிலும் பாத் ரூம் வசதிகள் எல்லாம் இருப்பதாகவும், அறையில் போன் வசதிகள் எல்லாம் இருப்பதாகவும் சொல்லுகிறார்கள். என்னைப்போன்றவர்கள் அடிக்கடி இரவு காலத்தில் வெளியில் போகவேண்டுமானால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. முக்கியமாக ஹாஸ்டலில் படுக்கை வசதி மிகவும் குறைவாக இருக்கிறது. ஹௌஸ் கமிட்டியில் டன்லப்பில்லோ மெத்தைகள் எல்லாம் வாங்கி போடவேண்டும் என்று கேட்டிருந்தோம். அது இது வரையிலும் நடைபெற்றதாக தெரியவில்லை. அதுமட்டுமல்ல, இங்குள்ள அங்கத்தினர்களுக்கு கொடுக்கப்படும் அலவன்ஸ் மற்ற மாகாணங்களில் கொடுக்கப்படுவதை விட குறைவாக இருக்கிறது. கேரள ராஜ்யத்தில் அலவன்ஸும் கூட்டிக் கொடுக்கப்படுகிறது, சம்பளமும் 200 ரூபாய் வரை கொடுக்கப்படுகிறது. பிரிட்டனில் எதிர்க்கட்சித் தலைவராய் இருக்கின்ற அட்லி அவர்கள் சமீபத்தில் இங்கு வந்திருந்த போது குறிப்பிட்டார்கள், வெளிநாடுகளில் சென்றவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள், அந்த நாடுகளில் எல்லாம் பார்லிமெண்டிலுள்ள எதிர்கட்சித் தலைவர்களுக்கு வாழ்க்கைவசதிக்கு சம்பளமும் அலவன்ஸும் கொடுக்கப்படுகிறது என்று சொன்னார்கள். ஒவ்வொரு நாட்டினுடைய நிதி நிலைமைக்குத் தகுந்தபடி கொடுக்கப்படுவதாகவும் குறிப்பிட்டார்கள். இங்கே எப்படியிருக்கிறது என்றால் ஹாஸ்டல் ரூம் வாடகைக்காக 2½ ரூபாய் போக மீதி 10 ரூபாய் அலவன்ஸாக கொடுக்கப்படுகிறது. அதை வைத்து அங்கத்தினர்கள் என்ன செய்ய முடியும்?

16th March 1961] [Sri V. Subbiah]

வெளியே செல்வதற்கு எவ்வித வசதியும் இல்லை. டாக்சி இல்லாமல் வெளியே போக முடியாது. சாப்பாடு வசதியும் கிடையாது. மொத்தத்தில் இந்த ஹாஸ்டலைப் பற்றி சொல்லவேண்டுமானால் இது ஒரு சத்திரத்தைப் போல் தான் இருக்கிறது. காலையில் குளிப்பதற்குப் போனால், எங்களுக்கு முன்னால் மவுண்ட் ரோட்டிலுள்ள டாக்சி டிரைவர்கள் வந்து குளித்து விட்டுப் போய்விடுகிறார்கள். வெந்நீர் போன்ற எவ்வித வசதியும் குளிப்பதற்கு செய்யப்படவில்லை. இங்கு காலையில் 8½ மணிக்கு அசெம்பிளிக்கு வரவேண்டுமென்றால் வர முடிவதில்லை. அங்கு குளிப்பதற்கு க்யூவில் நிற்கத்தான் வேண்டியிருக்கிறது. இதைத் தவிர எங்களுக்கு வேறு எவ்வித சலுகையும் இல்லை. அதோடு வெளியிலே இருந்து வரக்கூடியவர்களுக்கு இங்கு இடமளிப்பதால், நாங்கள் வரும்போது எங்களுக்கு இடமில்லை என்று சொல்லப் பட்டு, வெளியே தங்கவேண்டிய நிலைமையும் சில சமயங்களில் ஏற்படுகிறது. அப்படி யார் யாரோ வெளியே இருந்தெல்லாம் வந்து தங்கக்கூடிய ஒரு பெரிய சத்திரமாக அது இயங்கி வருகிறதே தவிர, சட்ட மன்ற உறுப்பினர்கள் தங்கக் கூடிய ஒரு நிலையிலே இல்லாத அளவில்தான் அது இப்போது இயங்கிக் கொண்டு வருகிறது. இதையெல்லாம் நான் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வராமல் இருக்கலாம். ஆனால் நானே அனுபவித்ததை அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகின்றேன்.

அது மட்டுமல்ல. நண்பர்கள் பலர் பேசினார்கள், விரும்புகிறார்கள். இன்றைக்கு மத்திய அரசாங்கத்திலே உள்ள அங்கத்தினர்களுக்கெல்லாம் ரயில்வே பாஸ் கொடுக்கிறார்கள். எங்களுக்கு ராஜ்ய அளவிலாவது கொடுக்க வேண்டுமென்று கேட்கிறார்கள். அதேபோல் ஸ்டேட் டிரான்ஸ்போர்டில் இன்றைக்கு நெடுந்தூரம் செல்லக்கூடிய எக்ஸ்பிரஸ் பஸ்கள் விடப்படுகிறது. அதிலேயும் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு, தூரமாகப் போகக்கூடியவர்களுக்கு 300, 400 மைல்களுக்கு போகக்கூடியவர்களுக்கு பாஸ் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றும் விரும்புகிறார்கள். இதிலேயும் கனம் அமைச்சர் அவர்கள் மனது வைத்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதனால் அதிகம் ஒன்றும் செலவு ஆகிவிடாது. எத்தனையோ செலவினங்களை சில சவுகரியங்களுக்காக இன்றைக்கு செய்துகொண்டு வருகிறோம். ஆகவே இதிலே கனம் அமைச்சர் அவர்கள் அவசியம் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு இன்னொன்று. எலெக்ஷனைப் பற்றி சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எலெக்ஷனுக்கு நகரங்களில் இருக்கின்றதைப் போல் கிராமங்களிலே நல்ல முறையில் வசதிகள் கிடையாது. கிராமங்களிலே உள்ளவர்களை ஓட்டுச் சாவடிக்கு அழைத்து வருவதென்றால் மிகவும் கஷ்டமான ஒரு பிரச்னையாகும். அவர்கள் பல மைல்களுக்கு நடந்து சென்று ஓட்டளிக்கக் கூடிய

[Sri V. Subbiah] [16th March 1961

அளவில் இன்றைக்கு இருக்கிறார்கள். அவர்கள் வேலைக்குச் செல்லக்கூடியவர்கள். அவர்கள் பயிர்த் தொழிலை நம்பி கிராமங்களிலே வாழ்ந்து கொண்டு வருகிறார்கள். அப்படிப்பட்டவர்களை கொண்டுபோய் ஓட்டுப் போடச் செய்வது என்பது மிகவும் கஷ்டமான ஒரு பிரச்னையாகும். ஆனால் நகரங்களிலோ வார்டுக்கு வார்டு ஓட்டுச் சாவடிகள் போடப்படுகிறது. கிராமங்களை எடுததுக்கொண்டால், 2, 3 மைல்களுக்கு நடந்து சென்று ஓட்டுப் போடக்கூடிய கஷ்டமான பிரச்னையாக இருக்கிறது. ஆகவே அந்தந்த கிராமத்திலே இருக்கக்கூடிய ஜனத்தொகைக்கு தகுந்த வாறு, 500 பேர்கள் இருக்கக்கூடிய ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு ஓட்டுச் சாவடியை அமைத்தால், எல்லோரும் சென்று ஓட்டளிக்கக் கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும். அப்போதுதான் கிராமங்களிலேயும், நகரங்களைப் போல் நல்ல முறையிலே ஓட்டளிக்க முடியும் சாதாரணமாக, ஓட்டு கணக்கெடுப்பு எடுக்கக்கூடிய காலத்திலே கிராமங்களில் குறைவாக "போல்" ஆவதை யாரும் மறுக்க முடியாது. இதற்கு இதுதான் காரணம். 2, 3 மைல்களுக்கு அப்பால் பெண்களும், வயோதிகர்களும் போய் ஓட்டளிக்க முடியாது. ஆகவே இப்போதுள்ள முறை மிகவும் மோசமானது. எல்லா ரெவின்யூ கிராமங்களிலும் ஓட்டுச் சாவடிகள் ஏற்படுத்தி, அந்தந்த கிராமங்களிலே உள்ள மக்கள் வேலைக்கு போய்விட்டு மாலையில் வந்தாவது ஓட்டளிக்கக்கூடிய வகையிலே வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு, பொதுவாக எலெக்ஷனுக்கு அமைச்சர்கள் பிரசாரத்திற்காகப் போகும்போது, உடன் அதிகாரிகளையும், மற்றைய அதிகாரங்களையும் உபயோகிக்காமல், ஒரு நல்ல முறையிலே, ஜனநாயக அமைப்பின்படி அவர்கள் பிரசாரம் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

**MR. SPEAKER**: இன்றைக்கு மூன்று எதிர்க் கட்சித் தலைவர்கள் பேச இருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் 15 நிமிஷங்கள் ஒதுக்கி இருக்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசுவதற்கு முக்கால் மணி நேரம் ஒதுக்கி இருக்கிறேன். ஆகவே இதற்கு 1½ மணி நேரம் தேவைப்படுகிறது. 12 மணிக்கு தலைவர்கள் பேச ஆரம்பிக்க வேண்டும். அதற்கு முன் இப்போது 90, 95 நிமிஷங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு அங்கத்தினருக்கும் 10 நிமிஷம் என்றால், 9 அங்கத்தினர்கள் பேசலாம். இப்போது 9 அங்கத்தினர்களுடைய பெயர்கள் தான் என்னிடம் இருக்கிறது. தலைவர்கள் தயவுசெய்து 15 நிமிஷம் தான் பேசவேண்டும். 13 நிமிஷம் ஆனவுடன் மணி அடிப்பேன். அதற்குப் பிறகு 2 நிமிஷ நேரம் பேசிக்கொண்டு, முடித்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதற்குமேல் பேசக்கூடாது. அப்படிப் பேசினால், அடுத்த தலைவரின் பெயரைக் கூப்பிடவேண்டியிருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

16th March 1961]

**Sri A. GOVINDASAMI:** ஒவ்வொரு அங்கத்தினருக்கும் 7 நிமிஷம் வைத்துக் கொள்ளலாம்.

**Mr. SPEAKER :** அப்படி மாற்ற முடியாது.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** சபைத் தலைவர் அவர்களே, சபைமுன் வந்திருக்கக்கூடிய அட்மினிஸ்ட்ரேஷன் மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். முதல் முதலில் நம்முடைய அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் தேவையா, இல்லையா என்பதைப்பற்றி பல பிரச்னைகளை பல நண்பர்கள் பேசினார்கள். அவசியம் அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் தேவை. அவர்கள் இருக்கின்ற இடத்திலேயே இருப்பார்களானால், முதல் முதலிலே அவர்களுடைய தொகுதியிலே உள்ள மக்கள், அமைச்சர்கள் ஓட்டு வாங்குவதற்கு மட்டும் தொகுதிக்கு வந்தார்கள், இப்போது சும்மா உட்கார்ந்துகொண்டு இருக்கின்றார்களே என்று சொல்வார்கள். ஆகவே தங்கள் தொகுதிக்கு அவர்கள் அவசியம் போகவேண்டும். அதோடுகூட, ஜனங்களுடைய குறைகள் என்ன என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவும், அவர்களுடைய ஆட்சியின் கீழ் இருக்கக்கூடிய பிரதேசங்களிலே தங்களுடைய திட்டத்தின்கீழ் திட்ட வேலைகள் எல்லாம் சரிவர நடந்து வருகிறதா என்பதை யெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டியது அமைச்சர்களுடைய கடமையாகும். அப்படி நடைமுறையில் நடக்கக்கூடிய திட்டங்களிலே என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதைக் கண்டு, அதை நிவர்த்தி செய்கின்ற பொறுப்பும் அவர்களைச் சார்ந்தது. அப்படிப் போய் வருகின்ற சமயத்திலே, என்னென்ன வசதிகள் ஜனங்களுக்கு வேண்டுமோ அவைகளை நேரிலே விண்ணப்பங்கள் கொடுத்து தெரிவித்துக் கொள்வதற்கும் முடிகிறது. அப்படித் தரப்படுகின்ற விண்ணப்பங்களினால், இந்த ராஜ்யத்திலே நடைபெறக்கூடிய திட்ட வேலைகள் மேலும் நன்கு நடைபெறுவதற்கு அனுகூலமாகவும், வசதியாகவும் இருக்கிறது. அதை அனுசரித்து அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் மிகமிகத் தேவைப்படுகிறது.

அப்படி அவர்கள் சுற்றுப் பிரயாணம் செல்வது கட்சி நலனுக்காக அல்ல. காங்கிரஸ் கட்சி பலம் அடைந்து விடும், அடைய வேண்டும் என்பதற்காக அல்ல. எதிர்க் கட்சிகளை ஒடுக்க வேண்டுமென்பதற்காக மட்டுமல்ல. அப்படி அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செல்வதால், தங்கள் கட்சிக்கு பலவீனம் ஏற்பட்டு விடுகிறது என்ற எண்ணத்தின் பேரில் மட்டும் இப்படிக் கருதக்கூடாது என்றும் நான் கூறுகிறேன். அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணத்தினால், இந்த தேசத்தின் நலன் மட்டும் அல்ல, ஆங்காங்கு நடைபெறுகின்ற வேலைகளும்கூட நல்ல முறையிலே நடப்பதற்கும், அதிகாரிகள் உடன் வருவதால் மக்கள் ஏதாவது குறைகள் சொன்னால் உடனே அவைகளைக் கண்காணிப்பதற்கும் ஒரு நல்ல நிலையை ஏற்படுத்துகிறது. அதோடு, சம்பந்தப்பட்ட அதிகாரிகள்கூட பயந்து நல்லமுறையிலே தங்கள் வேலைகளை ஒழுங்காகச் செய்வதற்கும், திறமையாகச் செய்வதற்கும் ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறது.

[Sri M. R. Kandaswami Mudaliar] [16th March 1961

ஆகவே இது நாட்டுக்கும் நல்லதாகிறது என்பதை மற்ற எதிர்க் கட்சி நண்பர்களும் ஓரளவு மனதிலே வைத்துக்கொண்டு, அமைச் சர்களுடைய சுற்றுப்பிரயாணத்தின் அவசியத்தை எண்ணிப் பார்த்தால், இப்படியெல்லாம் பேசவேண்டியத் தேவையில்லை.

(Sri V. Subbiah in the Chair.)

அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணத்தினால் அதிகமாக வீண் செல வாகிறது என்று சொல்லப்பட்டது. அப்படிப் பார்த்தால், நாம் இங்கே உட்கார்ந்து கொண்டு இருப்பதுகூட ஒரு செலவாகத்தான் ஆகும். இதை யெல்லாம் எதற்காக செலவு செய்கிறோம் என்று பார்க்க வேண்டும்? தேச நலத்திற்காக, தேசத்திலுள்ள மக்க ளுடைய நல்வாழ்வுக்காக செய்யக் கூடிய செலவாகும். அப்படிச் 10 30 a.m. செய்யும்போது, செய்யப்படுகின்ற செலவு நல்லமுறையிலே, செய்யப்படுகின்றதா அல்லது தவறான முறையில் நடக்கின்றதா என்னென்ன காரியத்திற்காக செய்யப்படுகிறது என்பதையெல் லாம் கவனிக்க வேண்டும். அவர்கள் செய்யக்கூடிய பணிகளாலே நாட்டுக்கு நல்ல பயன் ஏற்படுகிறதா என்று பார்க்க வேண்டும். ஆகவே அமைச்சர்கள் எல்லா இடங்களுக்கும் சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டியது அவசியம்.

சிலர் கட்சியின் நலனுக்காக, காங்கிரஸ் கட்சியைப் பலப் படுத்துவதற்காக, காங்கிரஸ்காரர்களுக்கு பலமேற்படுவதற்காக அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்வதாகக் கூறுகிறார்கள். ஆனால் நான் கூறுவேன், இப்படி அமைச்சர்கள் வருவதாலே காங் கிரஸ்காரர்களுக்கு சில இடையூறுகள் ஏற்படுகிறதே தவிர, நன்மை இல்லை என்று. ஏனென்று சொன்னால், பல இடங்களில் சில சம்பவங்கள் அம்மாதிரி நடக்கின்றன. அதனால் பாத கம்கூட ஏற்படுகிறது. அப்படி எங்களுக்கு பாதகம் ஏற்படுகின்ற காரணத்தினாலே, அமைச்சர்களை வரவேண்டாமென்று சொல்ல வில்லை. நம் நாட்டுக்கு நலன்கள் ஏற்பட வேண்டுமென்றால், நாட்டின் நலனிலே அக்கறையுள்ளவர்களாக இருப்பவர்கள், நாட் டின் வளர்ச்சியிலே கவனம் செலுத்துபவர்கள். நடுநிலைமை எண் ணத்தோடு இந்தக் கருத்துக்களைப் பார்த்தால், இதைப் பற்றிக் குறைகூற மாட்டார்கள். ஆகவே மீண்டும் அமைச்சர்கள் இந்த நாட்டிலுள்ள எல்லா இடங்களுக்கும் சுற்றுப்பிரயாணம் செல்வது அவசியமென்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் வரக்கூடிய காலத்தில் அவர்கள் பல இடங்களை நேரில் சென்று பார்க்கிறார்கள். பல ஆண்டுகளாக விண்ணப்பங்கள் மூலம் எழுதிப்போட்டும் விமோசனம் காணாத விஷயங்கள்கூட, அமைச்சர்கள் வரக்கூடிய காலத்தில் சம்பந்தப் பட்ட அதிகாரிகளும் வரக்கூடிய நேரத்தில் அந்தந்த கிராமங்களில் இருக்கக்கூடிய குறைகளையெல்லாம் கேட்டு, அதைப்பற்றி அந்த அதிகாரிகளைக் கூப்பிட்டு சொல்லக்கூடிய காலத்தில், உடனடியாக இந்தக் காரியங்களில் விமோசனம் ஏற்படுகிறது. அதனால் கிராம

16th March 1961] [Sri M. R. Kandaswami Mudaliar]

மக்களுக்கு பல நன்மை ஏற்படுகிறது. அதன் காரணமாக அவர்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள் இந்த அரசாங்கத்தைப் பற்றி. நான் உதாரணத்திற்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தொகுதியில் மின்சார இலாகா மந்திரி அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்தார்கள். ஒரு ஊருக்கு ரோடு வசதி இல்லாமல் இருந்தது. ஹரிஜனங்கள் வாழக்கூடிய இடம் அது. அந்த இடத்தில் யாராவது இறந்து விட்டால் பிரேதத்தைக் கொண்டு வருவதற்குக் கூட வழி கிடையாது. அன்றைக்கு கடும் வெயில். நடுப்பகல் ஒரு மணி இருக்கும். அங்கு இருக்கும் ஹரிஜனங்கள் மந்திரி அவர்கள் அந்த இடத்தை வந்து பார்க்கவேண்டும், ரோடு வசதி இல்லை என்று சொன்னார்கள். அந்த சமயத்தில் வெயிலைக்கூட பொருட்படுத்தாமல் மின்சார அமைச்சர் அவர்கள் அந்த ஊருக்குச் சென்று பார்த்தார்கள். இரு பக்கங்களிலும் நஞ்சை நிலங்கள் இருக்கின்றன. நடுவிலே 4 அடி அகலத்திற்குத்தான் ரோடு இருக்கிறது. அதிலேதான் பிரேதத்தைக் கொண்டு செல்லவேண்டும். அப்பொழுது பக்கத்தில் இருப்பவர்கள் சண்டைக்கு வருகிறார்கள். அதன் காரணமாக எவ்வளவு கஷ்டம் ஏற்படும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவர்கள் பலமுறை இதைப்பற்றி விண்ணப்பித்திருக்கிறார்கள். ஆனால் விமோசனம் கிடைக்கவில்லை. அமைச்சர் அவர்கள் நேரில் சென்று பார்த்த காலத்தில், அவர் உடனே அதிகாரிகளைக் கூப்பிட்டு 'மக்கள் விண்ணப்பம் போட்டிருந்தால் ஏன் இதை கவனிக்கவில்லை இதுவரையில், எப்படி அவர்கள் வாழ்க்கை நடத்தினார்கள், எப்படி அவர்கள் பிரேதத்தைக் கொண்டு போவார்கள்? உடனடியாக இந்த விஷயத்தை கவனிக்கவேண்டும்' என்று சொன்னார்கள். அதன் காரணமாக அந்த நிமிஷத்திலேயே அங்குள்ள நிலத்தை சர்வே செய்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளை செய்துகொடுக்கக்கூடிய வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டார்கள். கிராம மக்களுக்கு அது எவ்வளவு பயன் படக்கூடிய நிலைமையில் இருக்கிறது என்பதைச் சொல்லத் தேவையில்லை. நகர்புறங்களிலே எல்லா வசதிகளும் இருக்கின்றன. அவர்கள் வேண்டுமானால் அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டாம் என்று சொல்லலாம். ஆனால், அமைச்சர்கள் விஜயம் கிராம பொது மக்களுக்கு பெரிய பலன் தரக்கூடிய நிலைமையில் இருக்கிறது. என்னுடைய சக அங்கத்தினர்களை மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள் தயவுசெய்து இந்த விஷயத்திலே குற்றம் குறை சொல்லுவதை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று. அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யவில்லை என்று நிறுத்திவிட்டால் கிராமப் பொது மக்கள் மிகவும் பாதிக்கப் படுவார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஹாஸ்டலில் உள்ள வசதிகளைப் பற்றி சிலர் சொன்னார்கள். எல்லோரும் ஒரே குறிக்கோளாகச் சொன்னார்கள். ஹாஸ்டலில் பாத் ரூம் வசதி கிடையாது. போன் செய்வதற்கும் தகுந்த வசதி கிடையாது. வெளியில் இருக்கக்கூடிய

அத்தனை பேர்களும் அங்கு வந்து போன் செய்கிறார்கள். யாரையும் தடுக்கக்கூட முடியவில்லை. கேட்டால், 'கெஸ்டு, கெஸ்டு' என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். நான் 'போன்' செய்ய வேண்டுமென்றால், ½ மணி நேரம் அல்லது 15 நிமிஷம் காத்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது. ஆகையால், போன் வசதி செய்து தரவேண்டும் . 'அட்டாச்டு பாத் ரூம்' வசதி செய்து தர வேண்டும்.

அதேமாதிரி 'பாஸ்' வசதி செய்து தருவது முக்கியம் என்று கருதுகிறேன். சொந்தக் காரியங்களுக்கு மட்டுமல்ல, சட்டசபையில் அங்கத்தினராக இருந்துகொண்டு நாம் போட்டிருக்கிற திட்டங்களை, நம்முடைய ராஜ்யத்தில் நிறைவேற்றப்பட்டிருக்கிற திட்டங்களை, ஏற்படுத்தப்பட்டிருக்கிற தொழிற்சாலைகளை நேரில் போய் பார்ப்பதற்கு வசதி இல்லை. மக்கள் பிரதிநிதியாக இருந்தும், இந்த தேசத்தில் என்ன செய்துகொண்டிருக்கிறோம், என்ன செய்திருக்கிறோம், என்பதை நேரிடையாக காணக்கூடிய வாய்ப்பு ஏற்படாமல் இருக்கக்கூடாது. அதற்கு ரயில்வே பாஸ் வசதி செய்து கொடுக்கவேண்டும். அதனால் பெரிய அளவுக்கு ஒன்றும் நஷ்டம் ஏற்பட்டுவிடாது. அப்படி இருக்கும்பொழுது இந்த வசதியை ஏன் செய்து கொடுக்காமல் இருக்க வேண்டும். இந்த வசதியை செய்துகொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னொரு முக்கியமான விஷயத்தைச் சொல்லி முடித்துக் கொள்ளுகிறேன். அட்மினிஸ்டிரேஷனில் சில விஷயங்களில் காலதாமதம் ஏற்படுகிறது. இனம் நிலங்கள் இருக்கின்றன அதை சர்வே செய்து அதற்கு 'ரேட்' நிர்ணயம் செய்யவில்லை. ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுவதற்கு நிலம் கேட்டு 4, 5 வருஷங்கள் ஆகின்றன. ஹரிஜன நல இலாகா அமைச்சரிடம்கூட இது சம்பந்தமாக தேதிகளெல்லாம் குறிப்பிட்டுக் கொடுத்திருக்கிறேன். இந்த நிலத்தின் விலையை இன்னும் நிர்ணயம் செய்யாமல் இருப்பது, எந்த ரேட்டில் நிலத்தை எடுத்துக்கொள்வது என்பது தெரியாமல் இருப்பதினால், ஹரிஜனங்களுக்கு கிணறு வெட்டிக் கொடுக்க இடம் இல்லாமலும் அவர்களுக்கு குடி தண்ணீருக்கு வழி இல்லாமலும் அவர்கள் பெரிதும் கஷ்டப்படுகிறார்கள். இந்த மாதிரி காலதாமதத்தை தடுக்கவேண்டும், இந்த இனம் நிலத்தை உடனடியாக எடுத்துக்கொள்ளுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI S. M. ANNAMALAI :** கனம் தலைவர் அவர்களே, இங்கே சட்ட மன்றத்திற்கு முன்னால் கொண்டு வரப்பட்டிருக்கக்கூடிய வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன். அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்வதை, நாங்கள்—மாற்றுக்கட்சிக்காரர்கள்—தேவையில்லை என்று

16th March 1961] [Sri S. M. Annamalai]

சொல்லவில்லை. 'நான்-அபீஷியல் டூர்' 'அபீஷியல் டூர்' என்று தனித்தனியாக போடுங்கள். அதிகாரபூர்வமாக சுற்றுப்பிரயாணம் செய்கிறபொழுது மக்களுடைய வரிப்பணத்தை நீங்கள் வேண்டுமானால் 'டி. ஏ.' வாகப் பெற்றுக்கொள்ளுங்கள். ஆனால் கட்சிப் பிரசாரம் செய்வதற்கு செல்லுகிறபொழுது மக்களுடைய வரிப்பணத்தைப் பெற்றுக்கொண்டு உங்கள் கட்சியை வளப்படுத்துவீர்களானால், ஜனநாயக நாட்டிற்கு அது பாதுகாப்பாக இருக்காது, பாதகமாகத்தான் இருக்கும். ஆகையினால்தான் நாங்கள் சொல்லுகிறோம், நீங்கள் மாதத்தில் 20 நாட்கள் அதிகார பூர்வமாக சுற்றுப்பிரயாணம் செய்யுங்கள். கட்சியை மேலும் வளப்படுத்தவேண்டும் என்று அவா இருக்கக்கூடிய அமைச்சர்கள் 'நான்-அபீஷியல்' அதாவது அதிகாரப்பூர்வமற்ற சுற்றுப்பிரயாணம் போட்டுக்கொண்டு அவரவர்கள் தொகுதியிலோ அல்லது மாநிலம் பூராவும் சுற்றுப்பிரயாணம் செய்யட்டும் தாராளமாக.

அதுபோலவே அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்கிறபொழுது, அவர்கள் கட்சிக்காரர்களைக் கூப்பிட்டு மாவட்ட கலெக்டர்கள் 'மந்திரி சுற்றுப்பிரயாணம் வரப்போகிறார். எந்த நிகழ்ச்சியில் அவர் கலந்து கொள்ளவேண்டும்' என்று சுற்றறிக்கை அனுப்பிவிட்டு, காங்கிரஸைச் சார்ந்த கட்சிக்காரர்களைக் கூப்பிட்டு 'எந்த இடத்தில் கல்நாட்டு விழா செய்யலாம், எந்த கட்டிடம் பழையதாக இருக்கிறது, அங்கே சுண்ணாம்பு அடித்துவிட்டு அமைச்சரை திறப்பு விழா நடத்தச்சொல்லலாம்' என்று அவர்களுடன் கலந்து ஆலோசித்து சுற்றுப்பிரயாணத்தை நிர்ணயம் செய்கிறார்கள். அமைச்சர்களுடைய சுற்றுப்பிரயாணத்தை நிர்ணயம் செய்வதில் சட்ட மன்ற உறுப்பினர்களை கலந்து கொள்ளுவது கிடையாது. அதன் காரணமாக ஏதோ காங்கிரஸ் கட்சிக்கு வேண்டி மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் வருகிறார்கள் என்று மக்களிடத்திலே ஒரு அபிப்பிராயம் இருந்துகொண்டு வருகிறது. மாற்றுக்கட்சிக் காரர்களை மதிக்கிறோம் என்று சொன்னால், உண்மையிலேயே எல்லா சட்ட மன்ற உறுப்பினர்களையும் நல்ல முறையில் கலந்து ஆலோசனை செய்து மந்திரிகளின் சுற்றுப்பிரயாணத்தை நிர்ணயம் செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுபோலவே மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்யும்பொழுது கட்சிக் கூட்டங்கள் நடக்கின்றன. தாலுகா காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம், மாவட்ட காங்கிரஸ் கமிட்டி கூட்டம் என்று கூட்டம் கூடி ரகசியமாக பேசுகிறார்கள். அது உண்மையிலேயே சட்ட மன்ற உறுப்பினர்களை அவமதிப்பதாகும். மாற்றுக் கட்சியினர்கள் அமைச்சர்கள் வருகிறார்களே என்று அவர்களுடன் சுற்றுப்பிரயாணம் செய்கிறபொழுது கட்சிக் கூட்டத்தைப் போட்டுக்கொண்டு ரகசியமாக பேசுவது, நாங்கள் வெளியிலே நிற்பதா என்றால், அது நல்லது அல்ல, ஜனநாயக நாட்டிற்கு உகந்தது அல்ல என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அதுபோலவேதான், சட்டமன்றம் நடக்கும்பொழுது எனக்குத் தெரிந்த வரையில் 4 ஆண்டுகளாகப் பார்க்கிறேன், 100-க்கு ஏறத் தாழ 90 நாட்கள் வரை எல்லா அமைச்சர்களும் சட்டமன்றத்தில் இருந்தது கிடையாது. 5 அமைச்சர்கள், 4 அமைச்சர்கள், 3 அமைச்சர்கள், இப்படித் தான் சட்டமன்றத்தில் பார்க்க முடி கிறது. சட்டமன்றம் நடைபெறுகிறபொழுது 8 அமைச்சர்களும் இந்த சட்ட மன்றத்தில் இருந்தார்களா என்பதற்கு புள்ளி விவரம் பார்க்கிறபொழுது, 100-க்கு 10 நாட்கள்கூட அந்த மாதிரி இருக்க முடியாது. கனம் முதல் அமைச்சர் அவர்கள் எப்பொழுதும் சுற்றுப்பிரயாணத்திலே இருக்கிறார்களே தவிர, சட்டமன்றம் நடைபெறுகிறபொழுது அந்த சமயத்தில் இந்த இடத்திலே இருக்கவேண்டுமென்று அவர்கள் இருப்பது கிடையாது. தயவு செய்து அமைச்சர்களை கேட்டுக்கொள்ளுகிறேன், சட்டமன்றம் நடைபெறுகிறபொழுது அந்த இடத்தில் எல்லா அமைச்சர்களும் இருந்து மக்களுடைய குறைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும், மக்கள் சார்பாக வந்திருக்கக்கூடிய சட்டமன்ற உறுப் பினர்கள் தெரிவிக்கக்கூடிய குறைகளை கேட்பதற்கு தயவுசெய்து சட்டமன்றம் நடைபெறுகிற பொழுது அந்த இடத்தில் அமைச்சர் கள் இருங்கள்.

அடுத்தபடியாக, நாங்கள் கேள்விகள் கேட்கிறபொழுது சில அமைச்சர்களுக்கு கோபம் வருகிறது. நாங்கள் கேள்வி கேட்கிற பொழுது அதற்குத் தகுந்த பதில் சொல்லவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். நாங்கள் சரியான கேள்வி கேட்டால்கூட, அதற்கு பதில் சொல்ல முடியாவிட்டாலும்கூட, ஒரு விதி இருப்ப தன் காரணமாக பதில் சொல்லுவதற்கு விருப்பமில்லை என்று சொல்லி உட்கார்ந்து விடலாம். நிதி அமைச்சர் அவர்களை நான் நேற்று முன் தினம் ஒரு கேள்வி கேட்டேன். ஸ்தல சுய ஆட்சி கவுன்சில் சிபார்சுகள் சர்க்காருக்கு கிடைத்ததா, அந்த சிபார்சு கள் என்ன என்று கேட்டேன். லைப்ரரியில் ஒரு நகல் இருக்கிறது, அதைப் பார்த்துக்கொள்ளலாம் என்று பதில் சொன்னார். நான் லைப்ரரியில் சென்று பார்த்தேன். அந்தப் புத்தகம் இல்லை. பிறகு கேள்வி பிரிவில் ஒரு நகல் இருந்தது. அதைக்கொண்டு வந்து கொடுத்து பாருங்கள் என்று சொன்னார்கள். சட்டமன்றத்தில் கேள்விகள் கேட்பதற்கு உறுப்பினர்களுக்கு உரிமை இருக்கிறது. வேண்டுமானால் பதில் சொல்ல முடியாது என்று சொல்லுங்கள். தவறாக பதில் சொல்லாதீர்கள்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** லைப்ரரியில் கிடைக்க வில்லையா என்று கேட்கிறேன். அது எப்படி தவறு என்று தெரிய வில்லை.

**SRI S. M. ANNAMALAI:** நான் சென்று லைப்ரரியில் ஏறத்தாழ 2 மணி நேரம் அந்த இடத்தில் உட்கார்ந்து அவர்களைக் கேட்டேன். தேடிப் பார்த்தார்கள். இன்னும் வரவில்லை என்று சொன்னார்கள். உடனே கேள்வி பிரிவிலிருந்து அங்கு இருந்த ஒரே ஒரு நகலைக்

16th March 1961] [Sri S. M. Annamalai]

கொண்டுவந்து கொடுத்தார்கள். இப்போது வேண்டுமானால் அதை கொடுக்கிறேன். தவறான பதிலைச் சொல்லாதீர்கள். அதேமாதிரி ரெவின்யூ அமைச்சர் அவர்கள் கொடுத்த புள்ளி விவரம் வேறு, மராமத்து அமைச்சர் அவர்கள் கொடுத்த புள்ளி விவரம் வேறு என்று நேற்று நான் சட்டமன்றத்தில் சுட்டிக் காண்பித்தேன். சென்ற ஆண்டுகூட நான் ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கிறேன். தவறான பதில் சொல்லுகிறார்கள், தயவுசெய்து சொல்லாதீர்கள் என்று சென்ற ஆண்டிலேயே சொன்னேன். தொடர்ந்து பார்த்து வருகிறேன். இதைப்போல பல நிகழ்ச்சிகளைக் காண்பிக்க முடியும். சட்டமன்ற உறுப்பினர்களை அவமானப்படுத்தக்கூடிய நிலையிலே சில கேள்விகளுக்கு இங்கே பதிலளிக்கப்படுமேயானால், அது உண்மையிலேயே வருந்தத்தக்கது. நாங்கள் மைனாரிட்டியாக இருக்கலாம். எண்ணிக்கையில் குறைந்தவர்களாக இருக்கலாம். ஆனால் எங்களுக்கும் உரிமை இருக்கின்ற காரணத்தினால் கேள்வி களைக் கேட்கிறோம். தயவுசெய்து கேள்விக்கு உண்டான பதிலை அளியுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நிர்வாகத் துறையைப் பற்றி சென்ற ஆண்டே சொன்னேன். மிகவும் மோசமாக இருக்கிறது. ஒரே ஒரு உதாரணத்தை மட்டும் இங்கே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கல்வி இலாகாவி லிருந்து எனக்கு ஒரு எக்ஸ்பிரஸ் லெட்டர் வந்தது. நான் எப்பொழுதுமே காலையில் தபாலைப் பார்த்து விடுவது வழக்கம். தீவிரமாக வந்திருக்கிறதே என்று அவசரம் அவசரமாகப் பிரித்துப் பார்த்தேன். வெற்றுக் காகிதம்தான் அதிலே இருந்தது.

THE HON. SRI C. SUBRAMANIAM: முன்பு ஒரு தடவை சொன்னதையே திருப்பிச் சொல்லுகிறீர்களா? அல்லது இன்னொரு தடவை வந்ததா என்று கேட்கிறேன்.

SRI S. M. ANNAMALAI: அந்த சமயத்தில் கல்வி அமைச்சர் அவர்கள் இங்கிலாந்திற்குச் சென்று திரும்பி வந்தார். தேதி 27—10—1960. இங்கிலாந்துக்குச் சென்று திரும்பி வந்திருக்கிறாரே, அவருக்குப் பரிசாக இருக்கட்டுமே என்று அதை ரிஜிஸ்டர் தபாலில் அவருக்கு அனுப்பினேன். "பாருங்கள், உங்கள் இலாகா விலிருந்து வெற்றுக் காகிதத்தை அனுப்பியிருக்கிறார்கள். இது நியாயம் தானா" என்று கேட்டு அனுப்பித்தேன். இதுபோல் பல நிகழ்ச்சிகளை காண்பிக்க முடியும். ஆயிரம் புத்தகங்கள் எழுதி அச்சிட்டு வெளியிட முடியும். ஆகவே நிர்வாகத் துறையைச் சீர் திருத்தவேண்டும், நிர்வாக ஊழல்களை தயவுசெய்து நிவர்த்தியுங் கள் என்று கேட்டுக்கொள்கிறேன். சட்டமன்ற உறுப்பினர்கள் தங்கும் ஹாஸ்டல் மிகவும் மோசமாக இருக்கிறது. கொசுக்கள் அதிகமாக இருக்கின்றன. கொசுக்கடியைத் தாங்க முடியவில்லை. கொசுக்கள் இருப்பதினால் ஒரே ஒரு சௌகரியம் இருக்கிறது. இரவில் தூங்காமல் படிக்கக்கூடிய வசதி இருக்கிறது. (சிரிப்பு). அதை வேண்டுமானால் சொல்லலாம். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் ஹாஸ்டலுக்கு

வந்து உங்களுக்கு என்னென்ன குறைகள் இருக்கின்றன என்று கேட்டார்கள். இந்த ஆண்டுதான் வந்திருக்கிறார்கள். சென்ற மூன்று ஆண்டுகளாக வந்ததே கிடையாது.

THE HON. SRI P. KAKKAN : நான் ஹாஸ்டலுக்கு வரும் பொழுது எல்லாம் அங்கத்தினர் அங்கே இல்லைபோல் தெரிகிறது. பல தடவைகள் வந்திருக்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : அப்படி வந்தும் குறைகள் தீர்க்கப் படவில்லையே. அமைச்சர் அவர்கள் வந்திருக்கலாம். என்னென்ன குறைகள் இருக்கின்றன, சொல்லுங்கள் என்று கேட்டிருக்கலாம். சாகும்பொழுது சங்கரா, சங்கரா என்று சில வைதிகர்கள் சொல்லு கிறார்களே, அதேபோல் நான்காவது ஆண்டில் வந்திருக்கிறார்கள். நாங்கள் செல்லக்கூடிய நிலையில் இருக்கிறோம். (மணி அடிக்கப் பட்டது). ஆகவே இவைகள் எல்லாவற்றையும் கவனிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI A. MARIAPPAN : கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் மான்யக் கோரிக் கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சில நண்பர்கள் போலீஸ் இலாகா மான்யத்தை விவாதிக்கும்பொழுதே கூறியிருக்கிறார்கள். தேர்தல் சமயங்களில் எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள், குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள். சேலம் நகரத்தைப் பொறுத்த வரையில் மிகவும் மோசமான முறையிலே நடந்துகொண்டு வந்திருக்கிறார் கள். சென்ற ஒரு வருஷ காலமாக பல முறைகள் அவர்கள் மக்களை மிரட்டி, சாதாரணப் பொது மக்களை, ஓட்டுப் போடுபவர்களைக்கூட, கேவலமாகப் பேசி, அவர்கள் வராமல் இருப்பதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரிச் செய்பவர்கள் மீது போலீசார் கடும் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சென்ற 8 மாதங்களில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் சேலம் நகரத்தைப் பொறுத்த வரையில் பெரும்பாலான காங்கிரஸ் ஊழியர்களை கண்ட இடங் களில் எல்லாம் தாக்கியிருக்கிறார்கள். அம்மாதிரித் தாக்கினதோடு மட்டுமல்லாமல், முனிசிபல் கவுன்சிலர் ஒருவரை, கவுன்சில் அறையி லிருந்து கூட்டம் முடிந்து வரும்பொழுது தாக்கியிருக்கிறார்கள். காங்கிரஸ் ஊழியர்களைத் தாக்குவது மட்டுமல்லாமல், தங்கள் கொள்கைக்கு விரோதமாக இருக்கக்கூடியவர்களைத் தாக்குவது ஒன்றையே அவர்கள் குறிக்கோளாக வைத்துக்கொண்டிருக்கிறார் கள். போலீஸ்காரரைப் பொறுத்த வரையில் "நீங்கள் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள், கொஞ்சம் நிதானத்துடன் நடக்க வேண்டும், மகாத்மா காந்தி கூறியிருக்கிறார்கள், அகிம்சை மனப் பான்மையுடன் நடக்கவேண்டும்" என்றெல்லாம் உபதேசிக்கப்படு கிறது. இந்த அளவுக்கு நிலைமை மோசமாகப் போவதை சர்க்கார் தடுத்துத்தான் ஆகவேண்டும். சேலம் நகரத்தைப் பொறுத்த வரையில், அவர்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள்--குண்டர்கள் என்று

சொன்னாலும்கூட சரியாக இருக்கும்—சாதாரணமாக ஊழியர்களை எல்லா இடங்களிலும் தாக்கிக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஆதலால் இதை அமைச்சர் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதேமாதிரி பொதுக்கூட்டங்கள் நடக்கிறபொழுதுகூட, பல இடங்களிலே, காங்கிரஸ் ஊழியர்களையும் சட்டசபை அங்கத்தினர்களையும்கூட, எதிர்க்கட்சியைச் சேர்ந்த ஒரு சில அங்கத்தினர்கள், மிகவும் கேவலமான முறையிலே, சொல்லத்தகாத முறையிலே, பேசி வந்திருக்கிறார்கள். திரு. சின்னதுரை அவர்கள் இப்பொழுது இங்கே இல்லை, அவர்களுக்கு இது நன்றாகத் தெரியும். சேலம் நகருக்கு வந்திருந்தபொழுது, திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்தவர்கள் எப்படி பெண்களை எல்லாம் பற்றி—அதாவது குறிப்பிட்டவர்களையும், அவர்கள் வீட்டுப் பெண்களையும்கூட—தாறுமாறாகப் பேசுகிறார்கள் என்பதைப் பற்றி வருந்தப்பட்டார்கள். இம்மாதிரி மோசமான நிலையிலே திராவிட முன்னேற்றக் கழகம் போய்க்கொண்டிருக்கிறது. நீங்கள் இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களா என்று தனிப்பட்ட முறையில்கூட என்னிடம் கேட்டார்கள். இந்த நிலைமையை நீண்ட நாட்களுக்கு நீடிக்கவிடக்கூடாது என்று சர்க்காருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த அளவுக்குப் போய்க்கொண்டிருந்தால், தடி எடுத்தவன் தண்டல்காரன் என்ற நிலைமைதான் ஏற்படும். சாதாரண நடுத்தரக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள்கூட ஓட்டுப் போடும் இடங்களுக்குச் செல்லப் பயப்படுகிறார்கள். தவறான பிரசாரம் செய்யப்படுகிறது.

அம்மாபேட்டை நெசவாளர் காலனியில் பூராவும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார். நண்பர் கோவிந்தசாமி வந்திருக்கிறார்கள். (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி: நான் வரவில்லையே). நண்பர் பழனிசாமி வந்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். முதலிலே நாங்கள் ஒரு வீட்டுக்குச் சென்று பார்க்கும்பொழுது, அங்கே திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களின் படம் இருந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த அங்கத்தினர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் இதிலே பாகுபாடு காட்டப்படுவதாகச் சொன்னார்கள். இந்தமாதிரி தவறான பிரசாரம் செய்வதையே குறிக்கோளாக வைத்திருக்கிறார்களே தவிர, மக்களுக்கு நல்ல காரியங்கள் செய்வதிலே அவர்கள் அக்கறை எடுத்துக்கொள்வதில்லை.

குறிப்பாக மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்வதைப்பற்றி எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் கூறினார்கள். அப்படிச் சுற்றுப் பிரயாணம் செய்தால், தங்களுடைய கட்சி செல்வாக்கை இழந்து விடுகிறது என்ற காரணத்திற்காக அவ்வாறு குறிப்பிடுகிறார்கள். நண்பர் கந்தசாமி முதலியார் அவர்கள் மந்திரிகள் சுற்றுப்

[Sri A. Mariappan] [16th March 1961

பிரயாணம் செய்வதினுல் மக்கள் அடையும் நன்மைகளைப்பற்றிக் கூறினுர்கள். சேலம் நகரத்தைச் சுற்றி இருக்கக்கூடிய பல கிராமங்கள், மின்சார வசதி கிடைக்காமல், ரோடு வசதி இல்லாமல், மிகவும் மோசமான நிலையிலே இருந்தன. இதையெல்லாம் கனம் அமைச்சர் ராமையா போன்றவர்களை எல்லாம் நேரில் அழைத்துச் சென்று காண்பித்திருக்கிறோம். இவற்றை எல்லாம் மந்திரிகள் நேரடியாக வரும்பொழுதுதான் தெரிந்துகொள்ளக்கூடிய வாய்ப்பு ஏற்படுகிறது. நகர்ப்புறத்தில் எல்லா வசதிகளும் இருக்கும்பொழுது அதைச் சுற்றியுள்ள கிராமப்பகுதிகளில் இம்மாதிரி மின்சார வசதி, ரோடு வசதி, பள்ளிக்கூட வசதி இல்லாதது வருத்தப்படக்கூடிய விஷயம். இதை எல்லாம் மந்திரிகள் நேரில் பார்ப்பதற்கு அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்வது அவசியம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதே நேரத்தில் கட்சிக் கூட்டங்களில் கலந்து கொள்ளக்கூடாது என்று சொல்லுகிருர்கள். சட்டசபை அங்கத்தினர்கள் கமிட்டிக் கூட்டங்களுக்காகச் செல்லும்பொழுது, அதே மாதிரி நடந்துக்கொள்ள வேண்டாமா என்பதைப் பற்றியும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நாம் பல கமிட்டிக் கூட்டங்களுக்குப் போகிறோம். நம்முடைய கட்சிக் கூட்டங்களுக்குப் போகிறோம். பொதுக் கூட்டங்களில் ஈடுபடுகிறோம். அமைச்சர்களைப் பொறுத்தவரையில் பொது விவகாரங்களைக் கவனித்த பிறகு அங்கே இருக்கக்கூடிய ஊழியர்களை அழைத்து, கட்சி விவகாரங்களில் கலந்து கொள்கிருர்கள். அம்மாதிரிக் கலந்து கொள்வது தவறு என்று நான் நினைக்கவில்லை. ஜனநாயக நாட்டில் அமைச்சர்கள் தங்களுடைய கட்சியைச் சேர்ந்தவர்கள் எந்த முறையில் பொது மக்களுக்குச் செயலாற்றுகிருர்கள் என்பதைப் பார்க்க சந்தர்ப்பம் இருக்கவேண்டும்.

அந்த அளவில்தான் அமைச்சர்கள் ஊழியர்களைச் சந்தித்துப் பேசுகிருர்கள். எதிர்க்கட்சி சட்டசபை அங்கத்தினர்கள் வந்தால் பேசுவதற்கு சந்தர்ப்பம் இல்லை என்று சொன்னுர்கள். ஆனுல் அது சரியில்லை. அவர்களுக்கும் நிறைய சந்தர்ப்பங்கள் கொடுக்கப்படுகின்றன. எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கும் தெரிந்துதான் கலெக்டர்கள் அமைச்சர்களின் சுற்றுப் பிரயாண அறிக்கையை ஏற்பாடு செய்கிருர்கள். எதிர்க்கட்சி அங்கத்தினர்களும் மந்திரிகளுடன் சுற்றுப் பிரயாணம் செய்கிருர்கள். அப்படி அவர்கள் மந்திரிகளோடு சுற்றுப் பிரயாணம் செய்கிருர்கள் என்பதைப் பார்த்திருக்கிறேன். அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணத்தினுல் தங்கள் கட்சிக்கு செல்வாக்குப் போய்விடும் என்று பயந்துதான் அவர்கள் இப்படிச் சொல்லுகிருர்கள் என்று நினைக்கிறேன். அதனுலேயே அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணத்தை கண்டிக்கிருர்கள் என்று நினைக்கிறேன். ஆகவே அமைச்சர்கள் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டும், அப்படிச் செய்தால்தான் அவர்கள் அந்தந்தத் தொகுதிகளில், பகுதிகளில் உள்ள நிலைகளைத் தெரிந்து கொள்ள முடியும். எலெக்ட்ரிசிடி போன்ற பிரச்சினைகள் வரும் போது அவர்கள் நேரில் அந்தப் பகுதிகளுக்கு வந்தால்தான்

16th March 1961] [Sri A. Mariappan]

நல்லது. அப்படித்தான் எங்கள் ராசிபுரம் பகுதிகளில் உள்ள ஆழமான கிணறுகளை நேரில் பார்த்தால்தான் தெரியும். பார்த்தாலே பயமாக இருக்கும். சட்ட சபையில் கேட்டால் போதாது. நேரிடையாகச் சென்று பார்த்தால்தான் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்ள முடியும், அந்தப் பகுதி மக்களுக்கு உடனடியாக உதவிகள் செய்ய முடியும். ஆகவே, அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்வது மிக அவசியம் என்று கூறிக்கொண்டு, எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் தவருக நடப்பதையும் அமைச்சர்கள் கண்டிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* SRI K. R. NALLASIVAM : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, நான் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் பேச விரும்பும்போது, வெட்டுப் பிரேரணைகளில் உள்ள தேர்தலுக்கு மூன்று மாதங்களுக்கு முன்னுல் அமைச்சரவை ராஜிநாமா செய்யவேண்டும் என்றிருக்கும் பிரேரணையை முக்கியமாக ஆதரித்துப் பேச விரும்புகிறேன். அதைப் பொருத்த வரையில், இங்கே இருக்கும் மந்திரி சபை அதைப்பற்றி நன்கு யோசனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள் என்பதற்காக அல்ல; அதை ஒரு சோதனையாக ஏன் செய்து பார்க்கக் கூடாது என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதாவது இன்றைக்கு நாம் நான்காவது ஆண்டில் இருக்கிறோம். இன்னும் ஒரு ஆண்டு காலத்தில் தேர்தல் வர இருக்கிறது. இந்த நான்கு ஆண்டுகளாக இந்த அமைச்சர்கள் நடுநிலையில் இருந்து நடந்திருந்தாலும், சில சந்தர்ப்பங்களிலே உணர்ச்சி வசப்பட்டு, நடவடிக்கைகளில் ஈடு படுகிறார்கள் அல்லது பேசி விடுகிறார்கள். ஆகவே, மூன்று மாதங்களுக்கு முன்னதாக அதிகாரிகள் கூட வராமல், எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்குச் சமமாக தேர்தலில் ஈடுபட்டால் என்ன? சர்க்கார் சாதனைகளை தங்கள் சாதனைகளை எடுத்துச் சொல்ல சம சந்தர்ப்பம் இருக்கும் அல்லவா? வேறு எந்த ராஜ்யத்திலும் அவ்விதம் செய்யாவிட்டாலும்கூட, எல்லாவற்றிலும் முன்னேடியாக இருக்கும் நம் ராஜ்யம் ஏன் இதிலும் வழிகாட்டக் கூடாது என்று கேட்டுக் கொள்ளவிரும்புகிறேன்.

அமைச்சர்கள் ஏராளமாக தொகுதிகளில் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டியது மிகவும் அவசியம். சட்ட சபை வேலைகளோடு, தொகுதி மக்களின் வேண்டுகோள்களை நேரிடையாக அறிய சந்தர்ப்பம் வேண்டும். எதிர்க்கட்சிக்காரர்களும், மக்கள் சார்பில் அவர்கள் பிரச்னைகளுக்கு தீர்வு காண மந்திரிமார்கள் வரும்போது ஏராள விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டால் மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் குறையும்; அப்படிச் சாத்தியமான முறைகள் இருக்கின்றன. ஆகவே எதிர்க் கட்சிக்காரர்கள் அதைக் கண்டு கண்டிக்க வேண்டாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri K. R. Nallasivam] [16th March 1961

இன்றைக்கு மந்திரிமார்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும் போது இரண்டு காரியங்கள் செய்கிறார்கள். ஒன்று கட்சிக் கூட்டங்களில் கலந்து கொள்வது; இரண்டு, பொது விழாக்களில் கலந்து கொள்வது. கட்சிக் கூட்டங்கள் பற்றி ஆட்சேபணையில்லை. கட்சிக் கூட்டத்தில் கலந்து கொண்ட பிறகு—எல்லோரும் அப்படிச் செய்கிறார்கள் என்று சொல்லவில்லை. ஒரு சிலர் செய்கிறார்கள்—ஒரு சிலர் பொதுக் கூட்டங்களுக்கு, விழாக்களுக்கு, தண்ணீர் தொட்டியைத் திறப்பதோ அல்லது பள்ளியைத் திறப்பதோ போன்ற விழாக்களில் அறிந்தோ அறியாமலோ கட்சிப் பிரசாரத்தில் இறங்கிவிடுகிறார்கள், தங்கள் பிரசங்கத்தை கட்சிப் பிரசாரமாகத் திருப்பி விடுகிறார்கள். பொது விழாக்களுக்கு அமைச்சர்கள் வரும்போது தொகுதியிலுள்ள எதிர்க் கட்சி அங்கத்தினர்களும் கூடுமான வரையில் போகிறோம். அந்தக் கூட்டங்களில் அமைச்சர்மார்கள் கட்சிப் பிரசாரத்தில் இறங்கும் போது எதிர்க் கட்சி அங்கத்தினர்களுக்கு சிக்கலான சூழ் நிலையை உண்டாக்கி விடுகிறார்கள். அமைச்சர்கள் எதிர் கட்சிகளைத் தாக்குவது பற்றி கவலையில்லை. அவர்கள் ஒரு கூட்டத்தில் அப்படிச் சொன்னால், உடனே இன்னொரு இடத்தில் நாங்கள் ஒரு கூட்டம் போட்டு அவர்களைத் தாக்குகிறோம். ஆனால், பொது விழாக்களில் நாங்கள் இருக்கும் கூட்டங்களில் கட்சிப் பிரசாரம் செய்வதோ, கட்சிகளைத் தாக்குவதோ சரியாக இல்லை. சர்க்காருடைய சாதனைகளை எடுத்துச் சொல்வதிலும் ஆட்சேபணையில்லை. ஆனால், கட்சிப் பிரசாரம் செய்யும்போது, கட்சியின் சாதனைகள், சர்க்காரின் சாதனைகள் என்று சொல்லக் கூடிய விஷயம் நுணுக்கமானது. அந்த விஷயங்களில் பொது மக்கள் முன்னிலையில் சிக்கல்களை உண்டு பண்ண வேண்டாம் என்று கூறிக் கொள்ளுகிறேன். அதே போல எதிர்க் கட்சிகளை தாக்குவதும் பொதுக் கூட்டங்களிலும் இருக்கக் கூடாது. அப்படிச் சொல்லும் போது, நிச்சயமாக நாங்களும், எதிர்க்கட்சிகளும் அம்மாதிரியே நடக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். அது சம்பந்தமாகத் தீர்ப்பு கொடுக்க வேண்டியவர்கள் பொது மக்கள்.

சட்ட சபை நடவடிக்கைகளைப் பொறுத்த வரையில், தமிழிலேயே எல்லா நடவடிக்கைகளும் இருக்க வேண்டும். 10 ஆண்டு காலத்தில் ஆந்திரமும் கேரளாவும் பிரிந்த பிறகு, இங்கே இருக்கக் கூடிய அங்கத்தினர்களிளே, ஆங்கிலத்தில் பட்டம் பெற்றவர்கள், சர்க்கார் வெளியிட்டுள்ள "Who is w'o" புத்தக அடிப்படையிலே பார்க்கும் போது, பட்டம் பெற்றவர்கள் மொத்தத் தொகையில் நாலில் ஒரு பாகம் தான்; ஆங்கிலத்தில் நல்ல பயிற்சி பெற்றவர்கள் பட்டம் பெற்றவர்களாக இருப்பார்கள் என்ற அடிப்படையில் சொல்லுகிறேன். நல்ல அனுபவத்தின் பேரில் மொழிப் பயிற்சி அடைந்திருக்கக் கூடியவர்கள் சுமார் 10 சதவிகிதம் இருப்பார்கள். மீதி உள்ளவர்கள் அவ்வளவு பேரும் தமிழிலே நடவடிக்கைகள் நடந்தால்தான் புரிந்து கொள்ளமுடியும். தமிழ் மக்களுக்காக

16th March 1961] [Sri K. R. Nallasivam]

சட்ட திட்டங்களும் மற்றும் பல காரியங்களும் செய்யப்படும் இந்த சபையில் எல்லாம் தாய் மொழியில் இல்லாமல் இருந்தால் மக்களுடைய அங்கத்தினர்கள் புரிந்து கொள்ள முடியாது; மக்களுக்காக வாதாடும் உறுப்பினர்களுக்கு இங்கே அது முட்டுக் கட்டையாக இருக்கிறது. அலுவலகங்களில் ஆங்கிலத்தில் செய்வதை தமிழிலேயே செய்ய வேண்டும் என்பதில் கஷ்டங்கள் இருக்கின்றன, ஒப்புக்கொள்ளுகிறேன். அதே நேரத்தில் இந்தச் சட்டசபையில் இன்றைக்குப் பல விஷயங்களைத் தமிழிலேயே நடத்தலாம். கொஞ்ச நேரத்திற்கு முன்பு உரிமை பிரச்னைபற்றி விவாதம் நடைபெற்றது. நுணுக்கமான விஷயங்கள் அவை என்ற எண்ணம் இருக்கிறது. நுணுக்கமான விஷயங்களைத் தமிழிலே பேச முடியாது என்ற பயத்தைக் கொண்டிருந்தால், அதுவே தமிழ் வளர்ச்சிக்குத் தடையாக இருக்குமே என்ற பயம் உண்டாகிறது. ஆகவே, இம்மாதிரி விஷயங்களில், அமைச்சரவர்களும், எதிர்க்கட்சித் தலைவர்களும் தமிழையே கையாள வேண்டும். கேள்விக்குப் பதில், அதுபற்றிய புள்ளி விவரங்கள், கேள்விமீது கொடுக்கப்படும் அறிக்கைகள், மற்ற அறிக்கைகள் எல்லாம் தமிழிலேயே கொடுக்க உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டும். நிர்வாக அறிக்கைகள் ஒவ்வொரு இலாகாவிலும் ஆங்கிலத்தில் இருக்கிறது. அவற்றிற்கு மொழி பெயர்ப்பு கிடையாது. அதைக் கொடுக்கவேண்டும்.

இந்த சட்ட சபை இலாகாவினர் '' Legislafure Information '' என்ற ஒரு நல்ல பத்திரிகையை ஆங்கிலத்தில் வெளியிடுகிறார்கள். மற்ற ராஜ்யங்களில் நடப்பதையும் மற்றும் அங்கத்தினர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்களையும் கொண்ட பத்திரிகை இந்த லெஜிஸ்லேடிவ் இன்பர்மேஷன். பல நுணுக்கமான விஷயங்களைக் கொண்ட இந்தப் பத்திரிகையை தமிழிலேயே வெளியிட்டுக் கொடுக்க முயற்சி எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அங்கத்தினர்களுக்கு ரெயில்வே பாஸ் கொடுக்க வேண்டும் என்று நீண்ட நாட்களாக கோரப்படுகிறது. என்னைப் பொருத்தவரை, ராஜ்யம் பூராவுக்கும் கொடுக்காவிட்டாலும் ஒரு அங்கத்தினர் தன் தொகுதியிலிருந்து, தாலுகா தலைநகருக்கு, ஜில்லா தலைநகருக்கு, இந்த மாநிலத் தலை நகருக்குப் போய்வர ஏதாவது ஒரு வகையில் உதவி செய்ய வேண்டும். ராஜ்யம் பூராவுக்கும் போக இல்லாவிட்டாலும் பாதகமில்லை.

சட்ட சபை அங்கத்தினர்களுக்கு சம்பளத்தைப் பொருத்தவரை ஒரு வார்த்தை. ஒவ்வொரு அங்கத்தினரும் தன் தொகுதியில் நல்ல வேலை செய்ய வேண்டுமானால், அவர்களுக்கு வேண்டிய பல சௌகரியங்கள் செய்ய வேண்டும்; அவர்களுக்குத் தபால், போக்கு வரத்து, உதவியாளர் போன்றவைகளில் பல கஷ்டங்கள், சங்கடங்கள் இருக்கின்றன. அவைகளை யெல்லாம் போக்க வேண்டும். அவர்கள் சம்பளத்தையாவது உயர்த்த வேண்டும்.

உண்மையிலேயே தொகுதிகளில் வேலை செய்கிறவர்களுக்குத் தினசரி 10 ரூபாயாவது கொடுக்க வேண்டும்; அப்பொழுதுதான் அவர்கள் ஒழுங்காக வேலைசெய்ய முடியும்.

அங்கத்தினர்களுடைய ஹாஸ்டலைப்பொறுத்த வரை, பெரிய அளவில் பிருமாண்டமாக எல்லா வசதிகளும், பாராளு மன்ற அங்கத்தினர்களுக்கு இருப்பதுபோல் வேண்டும் என்று கேட்க வில்லை; ஆனால், அங்கே கொசுக்கடியாவது இல்லாமல் செய்ய வேண்டும். பெரிய மெத்தை, எல்லா சௌகரியங்களோடும் வேண்டும் என்று சொல்லவில்லை. ஆனால், இந்தக் கொசுக்கடியைப் போக்கி, ஒழிக்க, ஒரு படுக்கை கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன்.

11 a.m.

*SRI S. RAMASAMY THEVAR: தற்காலிகத் தலைவர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையைப் பற்றிப் பேசிய அன்பர்கள் பலர், மந்திரிகளுடைய சுற்றுப் பிரயாணத்தைப் பற்றியே அதிகமாகப் பேசினார்கள். மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்வதை நான் பெரிதும் வரவேற்கிறேன். மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் வருவதால்தான் பழுது பார்க்கப்படாத ரோடுகள் பழுது பார்க்கப்படுகின்றன; சீர்படுத்தப்படாத ஆபீஸ்கள் சீர் படுத்தப்படுகின்றன; ரிகார்டுகள் சரியாக வைக்கப்படாத இடங் களில் எல்லாம் அவை சரியாக வைக்கப்படுகின்றன. மந்திரிகள் வருகிறார்கள் என்ற பயத்தினால் சிறிது கவனிக்கப்படுகிறது. இல்லையென்றால், ஒரே தூக்கமாகத்தான் இருக்கும்.

இன்று நாட்டிலே நிர்வாகம் ஓரளவு நல்ல முறையில் இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும். ஊழல்கள் மலிந்துவிட்டன. எங்கு பார்த்தாலும் லஞ்சம் போன்ற நடவடிக்கைகள் நடந்து வருகின்றன. இவைகளைப் போக்குவதற்கு நமது மந்திரிகள் திடீர் திடீர் என்று சுற்றுப் பிரயாணம் செய்வார்களாயின், நல்ல முறை யில் நிர்வாகம் நடக்கும். மந்திரிகள் எந்த நேரத்தில் வருவார் களோ என்று அங்குள்ளவர்களுக்குப் பயம் இருக்கும். நமது அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் வரும்போது, நல்ல முறையில் சுற்றிப் பார்க்கட்டும். மக்களுடைய குறைகளைப் போக்கட்டும். 'உங்களுக்கு என்ன வேண்டும்? குளங்கள் வெட்ட வேண்டுமா? பள்ளிக்கூடம் ஆரம்பிக்க வேண்டுமா?' என்று மக்களிடத்தில் கேட்டு காரியங்களை நிறைவேற்ற வேண்டும். உத்தியோகஸ்தர்கள் நல்ல முறையில் மக்களுடைய கோரிக்கைகளைக் கவனிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அதிகாரிகள் அப்படிச் செய்கிறார்களா என்று மக்களிடம் கேட்டுத் தெரிந்து ஆவன செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். (Mr. Speaker in the Chair) முன் கை நீண்டால்தான் முழங் கை நீளும் என்று அமைச்சர்கள் மக்களிடம் சொல்லாமல், அவர்களுடைய குறைகளை போக்க முன் வந்தால், அதிகாரிகளும் அவர்களைப் பின்பற்றுவார்கள் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

16th March 1961] [Sri S. Ramasamy Thevar]

சட்டசபை அங்கத்தினர்களுக்கு வேண்டிய வசதியைப்பற்றி இங்கு பேசப்பட்டது மிகவும் பொருத்தமானது. அவர்களுக்கு இப்பொழுதிருக்கும் வசதி மிகவும் குறைவானது. கொசுக் கடி உபத்திரவம் இருக்கிறது என்று எல்லோரும் முறையிடுகிறார்கள். இது கவனிக்கப்படவில்லை. சாதாரண மக்களுக்கு உள்ள வசதிகூட சட்டசபை அங்கத்தினர்களுக்கு இல்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

அங்கத்தினர்களுக்கு போக்குவரத்து வசதியைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். சட்ட சபைக் கூட்டங்களுக்கு வரும் போதுதான் அவர்களுக்கு ரயில் வசதி அளிக்கப்படுகிறது. மற்ற சமயங்களில் படி கிடையாது. எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் சொன்னபடி, அவர்களுடைய ஜில்லாவிலே சுற்றுப் பிரயாணம் செய்யும்போதும், மாநிலத் தலைநகருக்கு வரும் போதும் ரயில்வே பாஸ் வசதி வழங்குவது அவசியம் என்பதை நான் வற்புறுத்த விரும்புகிறேன்.

தேர்தல் நேரத்தில் மக்கள் வோட்டுச் சாவடிக்குச் சென்று வோட்டுப் போடக் காத்திருக்கும்போது நிழல் இல்லாததால் அவர்கள் வெயிலில் பல மணி நேரம் இருக்க வேண்டியிருக்கிறது. வோட்டுச் சாவடிக்கு வந்தவர்கள்கூட, 'இது என்ன தொல்லை' என்று நினைத்து வாக்குகளைப் போடாமல் கூட திரும்பிப் போகக் கூடிய சந்தர்ப்பத்தை நான் கண்டிருக்கிறேன். ஆகையால், ஒவ்வொரு வாக்குச் சாவடிக்கும் பக்கத்தில் மக்கள் இருக்கும் அளவுக்கு நிழல் ஏற்படுத்த வேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

நமது தேசத்திலே வயது வந்த அத்தனை பேருக்கும் வோட்டுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. அதைக் குறித்து நாம் பெருமைப் படுகிறோம். அப்படியிருந்தும் மக்கள் தங்கள் வாக்குகளை நல்ல முறையில், நியாயமான முறையில், நேர்மையான முறையில் போடக்கூடிய அளவிற்கு நாம் அவர்களைப் பயிற்றுவிக்கிறோமா என்றால் அதுதான் நாட்டில் குறைவாகக் காணப்படுகிறது. 1957-ம் ஆண்டு நடந்த தேர்தலில், எனது தொகுதியில் ஒரு பெரிய விஷயம் நடந்தது. அதாவது 100 வோட்டுச் சீட்டுக்கள் கொண்ட ஒரு கட்டு அப்படியே திருடப்பட்டு, அந்த 100 வோட்டுக்களும் கோஷாப் பெண்களுடைய 'பூத்' தில், அதாவது 90-ம் எண்ணுள்ள பூத்தில் போடப்பட்டது. அவ்வளவு கள்ள வோட்டுக்களும் காங்கிரஸ் பெட்டியில் விழுந்தன என்றால், இது வருந்தத்தக்க விஷயம். நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டு, நாட்டுக்குச் சுதந்திரம் தேடித் தந்த ஒரு கட்சி, மக்களைத் தீய வழியில் பழக்குவது நல்லதல்ல என்று நான் எடுத்துச் சொல்கிறேன். நேர்மையான முறையில் தேர்தல் நடக்கவேண்டும் என்பதை நான் வற்புறுத்திச் சொல்கிறேன். இம் மாதிரி நடந்த ஒரு காரியத்தைக்கூட சர்க்கார் நல்ல முறையில் விசாரிக்காமல் அப்படியே விட்டுவிட்டார்கள். இனிமேலாவது இம்மாதிரி நடக்காமல் இருக்க ஆவன செய்ய வேண்டு மென்று நான் கேட்டுக்கொண்டு இத்துடன் என் உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

*Sri T. KARIA GOWNDER : கனம் சபாநாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சட்டசபை நிர்வாகத்தைப் பற்றிப் பேசினாலும், தமிழ்நாட்டிலே நடக்கும் நிர்வாகத்தைப்பற்றி பேசினாலும், எதிர்க் கட்சியிலிருந்து பேசிய நண்பர்கள், ஏதோ அமைச்சர்களெல்லோரும் சுற்றுப் பிரயாணம் செய்வது கூடாது என்றும், குறிப்பாக மதிப்பிற்குரிய முதல் அமைச்சர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் அதிகமாகச் செய்கிறார்கள் என்றும்கூட, குற்றம் சாட்டிச் சொன்னார்கள். ஆனால், மக்களிடத்திலே உண்மைக்கு மாறாக எதிர்க் கட்சி நண்பர்கள் செய்து வரும் பிரசாரத்தைப் போக்க வேண்டுமென்ற எண்ணத்தைக் கொண்டுதான், அமைச்சர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள் என்பதை நான் இந்தச் சமயத்தில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய மதிப்பிற்குரிய திரு. கோதண்டராமன் அவர்கள், 'அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணத்தின்போது பார்ப்பது இல்லை' என்று குற்றம் சாட்டிச் சொன்னார்கள். இப்படிப் பேசிவிட்டு வெட்டுப் பிரேரணையைக் கொண்டுவந்து அமைச்சர்களிடத்தில் இந்த மன்றத்திலேயே தங்களுடைய காரியத்தை உடனே சாதித்துக் கொண்டார்கள். தங்களுக்கு வேண்டியதை யெல்லாம் சொல்லி, அமைச்சரவர்களிடத்தில் வாக்கைக்கூட வாங்கி விட்டார்கள்.

எதிர்க் கட்சி உறுப்பினர்களுக்கெல்லாம் அமைச்சர்களுடைய சுற்றுப் பிரயாணத் திட்டங்கள் அனுப்பப்படுவதில்லை என்ற குற்றச் சாட்டு சொல்லப்பட்டது. ஆனால், நிலைமை எப்படியிருக்கிறதென்றால், அமைச்சரவையினர் எங்களுக்கெல்லாம் சமாதானம் சொல்லி அனுப்பிவிடுகிறார்கள். நாங்களெல்லாம் அமைச்சருடைய அறைக்கு அதிகமாகப் போவதில்லை. போய்க் கேட்டாலும் 'இன்னும் கொஞ்சம் பொறுங்கள்' என்று சொல்கிறார்கள். சட்ட மன்றம் நடக்கும் காலத்திலேயே எதிர்க் கட்சி நண்பர்கள் அமைச்சர்களிடத்தில் சென்று காரியங்களைச் சாதித்துக் கொண்டும் கூட, உண்மையை மறைக்கிறார்கள். இது வருந்தத் தக்கது. இந்த அமைச்சரவை சாதித்ததை, அவர்களுடைய புகழை உலகமே போற்றுகிறது. அப்படியிருக்க இவர்கள் ஏன் பயப்படுகிறார்கள் என்பது எங்களுக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கிறது.

நீலகிரியில் சட்ட மன்றக் கூட்டம் நடக்க வேண்டுமென்று நாம் முடிவு செய்திருந்தோம். மதிப்பிற்குரிய நண்பர் திரு. அண்ணாதுரை அவர்கள், "தமிழ்நாடு என்று பெயர் வைத்துவிட்டால் சட்டமன்றக் கூட்டம் நீலகிரியில் நடப்பதில் ஆட்சேபணை இல்லை" என்று சொன்னார்கள். நீலகிரிக்குப் போவதற்குள்ளாகவே, கூனூர் சென்ற போதே அங்கு பெரிய சுவரொட்டி விளம்பரங்களைப் பார்த்தேன். "கும்பி எரியுது, குடல் கருகுது, கோலேந்திகளே, உங்களுக்குக்

16th March 1961] [Sri T. Karia Gownder]

குளு குளு ஊட்டி ஒரு கேடா!" என்று விளம்பரம் செய்திருந்தார்கள். ரொம்ப அழகான தமிழில். 'கோலேந்திகள்' என்றால் அரசாளுகின்றவர்கள் என்றுதான் அர்த்தம். நாங்கள் எப்பொழுதும் கோலேந்தப் பிறந்திருக்கிறோம் என்று இந்தச் சமயத்தில் நான் அவர்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறேன். நாட்டுக்காகத் தியாகம் செய்தோம்; நாட்டுக்குச் சுதந்திரம் வரவேண்டுமென்று அந்தக் காலத்தில் கஷ்டப்பட்டோம்.

SRI A. GOVINDASAMI : கனம் அங்கத்தினர் கஷ்டப் பட்டாரா?

SRI T. KARIA GOWNDER : நாங்கள்தான் கஷ்டப் பட்டோம். அதிலே சந்தேகம் என்ன இருக்கிறது? நாங்களெல்லாம் ஜெயிலுக்குப் போகக்கூடாது, ஜில்லாவிலே இருக்கவேண்டுமென்று சொல்லிவிட்டார்கள். அதனால், நாங்கள் போகவில்லையே தவிர, "நீங்கள் கஷ்டப்பட்டீர்களா?" என்று கேட்கா தீர்கள் என்று நான் அவருக்குச் சொல்கிறேன். 'நீங்கள் கஷ்டப்பட்டீர்களா?' என்று இப்பொழுது எங்களைப் பார்த்துக் கேட்கிறார்களே, அவர்களைச் சார்ந்தவர்கள் எந்த விதத்திலாவது பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த நாட்டிலே நிலைபெறவேண்டுமென்று சொன்னார்கள் அப்பொழுதும். அதுவும் கூட்டு சேருகிறார்கள். அந்தக் கூட்டைப்பற்றி என்ன என்னவோ சொல்கிறார்கள். பொதுவாக உண்மையை எடுத்து மக்களிடத்தில் சொல்வது இல்லை. திரு. கோதண்டராமன் அவர்கள்கூட முழுக்க முழுக்க ஏமாற்றுகிறார்கள் என்பது என் எண்ணம். உண்மையை மறைத்துச் சொல்கிறார்கள். காரணம் கலெக்டரிடம் வருகிறபோது இருபது, முப்பது ஆட்களைக் கூப்பிட்டுக் கொண்டு வருகிறார். அப்படியே இங்கே மந்திரிகளிடம் போகும்போது—குறிப்பாகத் தொழில் அமைச்சர் அவர்களிடத்தில் பலவித சந்தர்ப்பங்களில் நுழைந்து ரொம்ப சாமர்த்தியமாக, திறனோடு காரியத்தைச் சாதித்துக்கொண்டு வெளிவந்துவிடுகிறார். என்னைவிட அவர் அதிகமான காரியங்களை அமைச்சர்களிடத்தில் சொல்லி சாதித்துக் கொண்டிருக்கிறபோது மக்களிடம் அமைச்சர்கள் ஒன்றுமே செய்வதில்லை என்று பேசுவது முழுப் பூசனிக் காயை சோற்றில் மறைப்பது போலத்தான் இருக்கிறது.

நீலகிரிக்குச் சென்றபோது பார்த்தோம். குந்தாவில் உலகமே போற்றும்படியாகக் காரியம் செய்திருக்கிறோம். 12 கோடி கொடுத்தோம், நன்றாகக் காரியம் செய்திருக்கிறீர்கள், இன்னும் கூடக் கொடுக்கிறோம் என்று உலகத்தவர்கள் பாராட்டக்கூடிய வகையில் செய்திருக்கிறோம். இதையெல்லாம் போய்ப் பார்க்காது கும்பி எரியுதே என்றால் என் எரியாது? இப்போது தமிழ்நாடு என்றும் பெயர் வைத்துவிட்டோம். அவர்கள் தாராளமாக வரலாம். ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களை 'செகண்டு ஸீஸன்' என்று சொல்வார்கள். தமிழ்நாடு என்று பெயர் வைத்ததனால் இந்த செகண்ட் ஸீஸனில் நமது சட்டசபைக் கூட்டத்தை அங்கே நடத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நீலகிரியை எடுத்துக் கொண்டால் விவசாயத் துறையில்கூட முன்னேறியிருக்கிறது. அங்கே புதிய புதிய தொழில்கள் எல்லாம் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை எல்லாம் நேரில் பார்த்து விட்டால் மக்களிடத்தில் இந்தச் சர்க்கார் ஒன்றுமே செய்யவில்லை என்று எப்படிச் சொல்வது என்கிற எண்ணமோ என்னமோ? இப்பவே அப்படித்தான் சொல்கிறார்கள்.

கடைசியாக இந்தச் சட்டமன்றத்தில் மெம்பர்கள் தங்கி யிருக்கிற விடுதியிலே சில மாறுதல்கள் செய்யவேண்டுமென்று நீண்டநாளாகப் பேசப்படுகிறது. அவர்கள் சொல்கின்ற மாறுதல் களை அரசாங்கம் செய்து கொடுக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்.

மந்திரிமார்கள் எல்லாம் கிராமாந்திரங்களுக்குச் செல்ல வேண்டும். சென்னை நகரத்தில் இருக்கக்கூடிய உடைந்த ரோடைப் பார்த்து கனம் அங்கத்தினர்கள் பேசுகின்றார்கள் என்று நினைக் கிறேன். எங்கள் பகுதியிலே வந்து பார்த்தால் பள்ளிக்கூடம் இல்லாத ஊரே கிடையாது. எந்த மூலை முடுக்கை எடுத்துக் கொண்டாலும் உயர்நிலைப் பள்ளிகளை ஏற்படுத்தி பலவிதமான முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறோம். ஆகவே ஏதோ குற்றம் சொல்ல வேண்டுமே என்பதற்காக செய்தவைகளை எல்லாம் கூட இல்லையென்று சாதிக்கிற உத்தியைக் கையாளாமல் இருக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். எப்படி இருந்தாலும் மக்கள் முடிவு சொல்லப் போகிறார்கள். முடிவு சொல்ல வேண்டிய பொறுப்பு உடையவர்கள் அவர்கள். உண்மையில் திரு. அண்ணாமலையை எடுத்துக் கொண்டால் எங்கள் மாவட்டத்தைப் பொறுத்த வரை யில் பல காரியங்களைச் செய்திருக்கிறார்கள். ஆனால் அவர்களே பல கூட்டங்களில் பேசுகின்றபோது ஒரு காரியமும் செய்யப்பட வில்லை என்று சொன்னால் அதற்காக வருந்த வேண்டியிருக்கிறது. ஆகவே உண்மைக்கு மாறாகப் பேசவேண்டாம் என்பதாக எதிர்க் கட்சி அங்கத்தினர்களைக் கேட்டுக்கொண்டு, தலைவருக்கு என் நன்றியைத் தெரிவிப்பதோடு முடித்துக் கொள்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI :** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, காங்கிரஸ் அமைச்சர்கள் இந்த நாட்டிலே சுற்றுப் பிரயாணம் செய்வதைப்பற்றி எதிர்த்தும், வரவேற்றும் கருத்துக் கள் இங்கே தெரிவிக்கப்பட்டன. என்னுடைய கட்சி சார்பிலே அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்வதை யாருமே எதிர்க்க வில்லை. ஆனால் அமைச்சர்கள் என்கிற முறையிலே, சர்க்கார் காரிய மாகச் சுற்றுப் பிரயாணம் செய்கிறபோது, அவர்கள் தங்களுடைய சொந்தக் கட்சி நலனில் ஈடுபடுவது, கட்சிப் பிரசாரத்தில் ஈடுபடு வது என்பது ஜனநாயக முறைக்கு உகந்ததாக இருக்காது என் பதே எங்கள் கட்சியினுடைய கருத்து. நண்பர் திரு. அண்ணாமலை யிருக்கிற விடுதியிலே சில மாறுதல்கள் செய்ய வேண்டுமென்று அவர்கள் கூடச் சொன்னார்கள். அமைச்சர்கள் கட்சிப் பிரசாரம் செய்ய வேண்டுமென்றால் அதற்கென்றே சில நாட்களை ஒதுக்கி அவர்கள் கட்சிப் பிரசாரத்திற்காகவே சுற்றுப் பிரயாணம் செய்ய

16th March 1961] [Sri A. V. P. Asaithambi]

லாம். மற்றப்படி அமைச்சர்கள் அரசாங்க அலுவலாகச் சுற்றுப் பிரயாணம் செய்கிறபோது அவர்களுடைய சொந்தக் கட்சி நலனில் காரியங்கள் செய்யக் கூடாது என்பதைத்தான் எங்கள் கட்சி வற்புறுத்துகிறது.

அதோடு மாத்திரமின்றி அமைச்சர் இங்கிருந்து புறப்பட்டு ஊர்வாரியாக வருவதைவிட மாவட்டவாரியாக மந்திரிகள் சென்று ஆங்காங்கு இருக்கிற நிர்வாகத் துறையினரிடத்தில் உள்ள குறைகள் என்ன? அந்தக் குறைகளை எவ்வாறு களைவது என்று முயற்சி செய்தார்களேயானால், குறைகள் நீக்கப்படும். அதோடு மறு தடவை அங்கே செல்கிறபோது அவர்கள் உத்தரவிட்டபடி காரியங்கள் நடந்திருக்கிறதா என்றும் பார்ப்பார்களானால் பல விஷயங்கள் உடனுக்குடன் தீர்க்கப்பட்டு மக்கள் குறை நிச்சயமாக நீங்குவதற்கு முடியும். இம்மாதிரியான முறைகளை இந்த மந்திரி சபை கவனிக்கவில்லை.

அடுத்தபடியாக எதிர்க்கட்சிகளைப் பற்றி காங்கிரஸ் அங்கத்தினர்கள் பேசுகிறபோது, "எதிர்க்கட்சியினர்கள் காங்கிரஸ்காரர்களைத் தகாத முறையில் பேசுவதாகவும், நடக்கத் தகாத முறையில் நடப்பதாகவும்" குறை சொல்லப்பட்டது. இந்த அமைச்சர் அவைக்குச் சொல்வேன். இன்றையதினம் எதிர்க்கட்சிக்காரர்கள் பேசுகின்ற பேச்சுக்கள் மட்டும்தான் போலீஸ் சுருக்கெழுத்தாளர்களால் எடுக்கப்படுகிறது. அப்படியின்றி அவர்கள் எல்லாக் கூட்டங்களுக்கும் அனுப்பப்பட்டு, எல்லாக் கூட்டங்களிலும் குறிப்பு எடுத்தார்கள் என்றால்—நான் இந்தச் சபைக்குச் சொல்லிக் கொள்வேன்—இன்று அமைச்சராக இருக்கக் கூடியவர்கள் கூட சட்ட விரோதமாகப் பேசியிருப்பதை பரிசீலனை செய்து பார்க்கிறபோது தெரிந்து கொள்ளலாம். அதை என்னால் நிரூபிக்க முடியும். எதிர்க் கட்சிகளைப் பற்றி அமைச்சர்கள் இந்த இடத்தில் இந்தமாதிரியாக வரம்பு மீறி பேசியிருக்கிறார்களே என்று இன்றையதினம் நாங்கள் எடுத்துச் சொல்கிறபோது "அப்படி நான் பேசவில்லை" என்று சொல்லிவிடுவதைப் பார்க்கிறோம். பத்திரிகையில் வந்திருக்கிறதே என்று எடுத்துக் காட்டுகிற போதுகூட "நான் இந்தமாதிரியாக அல்லவா சொன்னேன்" என்று தப்பிக் கொள்வதையும் பார்க்கிறோம். ஆனால் திராவிடக் கட்சியைப் பொறுத்த வரையில் எழுத்தில் ஆகட்டும், பேச்சில் ஆகட்டும் நல்ல கண்ணியம் இருப்பதை எந்தச் சமயத்திலும் நிரூபிக்க முடியும். ஆனால் காங்கிரஸ்காரர்கள் நடத்துகிற ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் கொண்டால் அதில் பேச்சிலாகட்டும், எழுத்திலாகட்டும் எத்தனை தாக் குறைவாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்ட முடியும். எதிர்க்கட்சிகள் தகாத முறையில் சட்ட விரோதமாகப் பேசி வருகிறார்கள், எழுதி வருகிறார்கள் என்றால் போலீஸ் ஆட்சியையே கையில் வைத்துக் கொண்டு இஷ்டப்படி ஆட்டி வைக்கிற இந்த அமைச்சரவை நிச்சயமாக எதிர்க்கட்சிகளை எல்லாம் விட்டு வைத்திருக்கும் என்று சொல்ல முடியாது.

[Sri A. V. P. Asaithambi] [16th March 1961

போலீஸ்காரர்கள் நடுநிலைமையில் இருக்கவேண்டும் என்றால் இன்றைய தினம் அவர்கள் எந்த அளவுக்கு இருக்கிறார்கள் என்று பார்த்தால் தெரியும். நான் சிறு உதாரணம் சொல்கிறேன்.

சென்னை நகரத்தைப் பொறுத்த வரையில் திராவிட முன்னேற்றக் கட்சி அடிக்கடி கூட்டங்கள் நடத்தி வருவதைக் கட்டுப் படுத்த வேண்டுமென்றோ என்னவோ ஒவ்வொரு டிவிஷனிலும் ஒரு நாளையில் ஒரு கூட்டம் தான் போட அனுமதிக்கப்படும் என்று எல்லாக் கட்சிகளையும் கலந்து ஒரு முடிவு செய்திருப்பதாகச் சொன்னார்கள். திருவல்லிக்கேணி பகுதியில் 'டி' டிவிஷன் என்று நினைக்கிறேன். திராவிட முன்னேற்றக் கட்சியின் சார்பில் ஒரு தேதி குறிப்பிட்டு அன்றையதினம் கூட்டம் நடத்த அனுமதி கோரப்பட்டது. ஏற்கனவே அந்தப் பகுதியில் ஒரு கூட்டத்திற்கு அனுமதி கொடுத்துவிட்ட காரணத்தினால் இதற்கு அனுமதி தர முடியாது என்று போலீஸ் அதிகாரிகள் மறுத்தார்கள். அதற்கப் புறம் வேறு ஒரு தேதியைக் குறிப்பிட்டு அனுமதி கேட்டார்கள். அவர்களும் கொடுத்தார்கள். ஆனால் அன்றையதினம் திராவிட முன்னேற்றக் கட்சியின் சார்பில் கூட்டம் நடத்துகின்ற அதே சமயத்தில் பீச்சிலே மந்திரிகள் பேசுகின்ற ஒரு கூட்டத்திற்கு போலீசார்கள் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். இது அவர்கள் வரையறுத்துக் கொண்டிருக்கிற கொள்கைக்கு விரோதமானது இல்லையா? எதற்காக அனுமதி கொடுத்தார்கள்? மந்திரிகள் பேசப் போகிறார்கள் என்றால் அவர்களுக்கு என்று ஒரு தனி விதியா? அல்லது அதே பகுதியில் அன்றையதினம் மந்திரிகள் பேசித்தான் ஆகவேண்டுமென்ற கட்டாயம் உண்டா? இந்த மாதிரி யான அளவுக்குப் போலீஸ் அதிகாரிகள் அல்லது வேறு இலாகா வினர்கள் மந்திரிகள் என்பவர்களுக்காக தங்கள் போக்கையே மாற்றிக் கொள்ளத் தக்க நிலைமை இருப்பதைத்தான் பார்க் கிறோம்.

அமைச்சர்களின் சுற்றுப்பிரயாணம் கட்சி சார்பற்ற முறை யிலே இருக்கவேண்டும். நேற்று முன்தினம் கனம் முதல் அமைச்சர் திரு. காமராஜ் அவர்கள் கரூரிலே பேசப் போகிறபோது "நான் போகிறபோது கலெக்டர் அவர்கள் வரவேண்டாம்" என்று சொன்னதாகப் பத்திரிகையிலே செய்தி வந்திருக்கிறது. இம்மாதிரி யாக இருக்கும் என்று சொன்னால் நான் பச்சையாகவே கட்சிப் பிரசாரம் செய்யப் போகிறேன் யாரும் வரத் தேவையில்லை என்று அவர்கள் சொல்லிவிடுவார்கள் என்று சொன்னால் அது வரவேற்கத் தக்கது. இதுமாதிரியான முறையை எல்லா அமைச்சர்களும் கூட கடைப்பிடிக்கவேண்டும்.

இரண்டாவது, நான் பொதுக் கூட்டங்களைப்பற்றி என் வலி யுறுத்த விரும்புகிறேன் என்று சொன்னால், ஜனநாயக நாட்டிலே நம்முடைய கருத்தை மக்களுக்குத் தெரிவித்தால்தான் அவர்கள் வாக்குகளை நாம் பெறமுடியும். அந்த அளவிற்கு ரொம்பவும் எதிர்க்கட்சிக்குப் பேசவும் எழுதவும் உரிமை அதிகம் அளிக்க வேண்டும். அதற்கான வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும்.

இதைக் கட்டுப்படுத்தக்கூடிய முறையிலே சட்டத்திலே கெடுபடி இருக்கக் கூடாது.

சென்னை நகரத்தைப் பொறுத்தவரை ஒரு கூட்டம் போடுவது என்று சொன்னால் அந்தக் கூட்டத்தை விளம்பரப்படுத்துவது இப்போது மிகவும் கஷ்டமான காரியமாக இருக்கிறது. அத்தகைய சூழ்நிலையை சட்டத்தைக் காட்டி உண்டு பண்ணுகிறார்கள். என்னுடைய வீட்டுச் சுவரிலே பொதுக் கூட்ட சுவரொட்டியை ஒட்ட நான் அனுமதித்தாலும் ஒட்ட வருகிறவர்கள் போலீசாரால் கைது செய்யப்படுகிறார்கள். இம்மாதிரியான ஒருசில தொந்திரவுகள் இருக்கும் காரணத்தால் ஒவ்வொரு காரியமும் தடைப்பட்டு வேகம் குறைகிறது. எனவே என்னுடைய அனுமதி இருக்கிறபோது போலீசார் அவர்களைப் பிடிப்பதோ தண்டனைக்குள்ளாக்குவதோ நல்லதல்ல. ஆகையால் போலீஸ் இலாக்காவினர் இத்தகைய முறைகளைக் கைவிடும்படி இந்த அமைச்சரவை சொல்ல வேண்டும்.

சில குறிப்பிட்ட இடங்களில்தான் கூட்டங்கள் நடத்தப்பட வேண்டுமென்று சென்னையிலே வரையறுக்கப்பட்டிருக்கிறது. சர்க்கார் கட்சித் தலைவர் கனம் சுப்பிரமணியம் அவர்கள் ஏதோ ஒரு பகுதியில் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசிய அந்த இடம் இக்கட்டான இடமாக இருந்ததின் காரணமாக அவர்கள் அதிகாரிகளைப் பார்த்து இம்மாதிரி இடங்களில் நீங்கள் அனுமதிக்கக் கூடாது என்று சொன்னதின் பலனை பொதுவான கொள்கையை கடைப்பிடிக்கப்படுவதாகக் கேள்விப்படுகிறேன். இது உண்மையோ அல்லவோ எனக்குத் தெரியாது. எப்படியிருந்தபோதிலும் ஜனநாயக நாட்டைப் பொறுத்தவரை நம்முடைய கருத்துக்களை ஒவ்வொரு வீட்டிலே இருக்கிறவர்களும் கேட்கவேண்டும். கடற்கரையில் கூட்டம் போடுவதோ வேறுபல இடங்களில் போடுவதோ அம்மாதிரியான இடங்களில் எல்லாம் கூட்டம் போட்டால் அதில் ஆர்வம் உள்ளவர்கள்தான் அங்கே வரமுடியுமே தவிர வாக்குரிமை வைத்துக்கொண்டு வீட்டிலே அமர்ந்திருக்கிறவர்கள் காதிலே கேட்க அது வசதி செய்து கொடுக்காது. எனவேதான் இந்த நிலைமையை முன்னிட்டு சந்துபொந்தாக இருந்தாலும் அந்த இடத்தில் கூட்டம் போடுவதற்கு அரசியல் கட்சிகளுக்கு அனுமதி தரப்பட வேண்டும். இதனால் போக்குவரத்திற்கு இடைஞ்சலாக இருக்கலாம். ஒரு சில மணி நேரத்திற்கு போக்குவரத்திற்கு இடைஞ்சல் இருந்தால் அதனால் ஒன்றும் கெட்டுப் போய்விடாது. ஆனால் இரண்டரை மணிநேரம் நடைபெறும் ஒரு பொதுக் கூட்டத்தில் அங்கு இருக்கிறவர்கள் கேட்கிறார்கள் என்று சொன்னால் அப்போதுதான் பாமார நிலைமையிலே இருக்கின்ற நம் நாட்டு மக்கள் உண்மையை உணருவதற்கு வசதி ஏற்பட முடியும். ஆகவே அத்தகைய வசதிகள் குறிப்பாக பிற்போக்காக இருக்கும் நம் நாட்டிலே நிச்சயமாகச் செய்து கொடுக்கப்படவேண்டும். போக்குவரத்துத் தடை என்று சொல்வது சரியான காரணம்

[Sri A. V. P. Asaithambi] [16th March 1961

ஆகாது. சமீபத்தில் பிரிட்டிஷ் ராணியார் வந்தார்கள். அப்போது பல பகுதிகளில் போக்குவரத்துத் தடை செய்தார்கள். சில மணி நேரத்திற்கு போக்குவரத்து வசதி நல்லமுறையிலே இருக்க வேண்டுமென்று சொல்வதில் தவறில்லை. மாதாமாதம் ஒரு திருவிழா நம் நாட்டிலே நடைபெறுகிறது. அந்தச் சமயத்தில் போக்குவரத்தும் கட்டுப்படுத்தப்படுகிறது. ஆகையால் கூட்டம் 6 மணிக்கு ஆரம்பமாகி 10 மணிக்கு முடியும் வரை இந்த நான்கு மணி நேரத்தில் எந்தவிதமான போக்குவரத்தாக இருந்தாலும் அதைக் கட்டுப்படுத்தினுல் பாதகம் ஒன்றும் ஏற்பட்டுவிடாது. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் இதைக் கவனித்து எல்லாப் பகுதிகளிலும் அடுத்த தேர்தல் முடிகிற வரையிலாவது இந்த முறையை ஏற்படுத்த வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்து ஒன்று சொல்லி முடித்துக் கொள்ளுகிறேன். ஒலி பெருக்கி கட்டுப்படுத்த வேண்டுமென்று எல்லா நேரத்திலும் இதை வைப்பதில் தொல்லை இருக்கலாம், ஆனல் பொதுக் கூட்டங்களைப் பொறுத்தவரை இரவு 9 மணி, 9½ மணிக்குமேல் ஒலிபெருக்கி வைக்கக் கூடாது என்று சொல்லுகிறுர்கள். கூடுமானவரை 10 மணிவரையில் வைக்கலாம் என்ற முறையிருந்தால் அவ்வளவு தொல்லை ஏற்பட்டுவிடாது. எனவே 10 மணிவரையாவது அதை வைக்கலாம் என்று பொதுவான விதியை வகுத்தால் அடுத்து வருகிற தேர்தலில் இன்றைக்கு இருக்கும் ஜனநாயகத்தைவிட நல்ல ஜனநாயகம் வளர்ந்து நல்லவர்கள் மன்றத்திற்கு வரமுடியும். இந்த நாட்டிலே நல்ல ஆட்சியை நிறுவ முடியும் என்ற காரணத்திற்காக இதை கனம் அமைச்சர் அவர்கள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு உரையை முடிக்கிறேன். வணக்கம்.

SRI P. G. KARUTHIRUMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இருக்கக்கூடிய மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மான்யத்திலே முக்கியமாக எதிர்க்கட்சிக்காரர்கள், அமைச்சர்கள் எல்லாம் அந்தப் பதவியில் இருந்துக் கொண்டு கட்சிப் பிரசாரம் செய்கிறுர்கள், அல்லது பொதுமக்களுடைய வரிப் பணத்தை கட்சியினுடைய ஆதரவு அல்லது பிரசாரத்திற்காகத்தான் செலவிடுகிறுர்கள் என்று முக்கியமாகக் குற்றம் சாட்டுகிறுர்கள். இன்னும் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி கூட்டம் கூடும் சமயத்தில் அமைச்சர்கள் எதிர்க் கட்சிக்காரர்களைக் கலந்துகொள்ளவேண்டாம் என்று அனுப்பி விடுவதாக ஒருசில எதிர்க்கட்சிக்காரர்கள் குற்றம் சாட்டினுர்கள். நான் அவர்களுக்குச் சொல்லுகிறேன் அதுதான் ஜனநாயகத்தின் அடிப்படைப் பண்பு. என்று கட்சிக் கூட்டத்திற்குப் போகக்கூடிய சமயத்தில் சர்க்கார் அதிகாரிகளையும் எதிர்க்கட்சி அங்கத்தினரையும் கலந்துகொள்ள அழைத்துச் செல்லாமல் அமைச்சர்கள் தங்கள் கட்சி என்ற தனிப்பட்ட முறையிலே கலந்துகொள்வதுதான் முறை. அதுதான் ஜனநாயக தத்துவம். அதிகாரிகளைக் கொண்டு காங்கிரஸ் கட்சியை

16th March 1961] [Sri P. G. Karuthiruman]

வளரச் செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை. காங்கிரஸ் கட்சி சார்பாக அப்படி நினைக்கவும் இல்லை. அப்படி நினைத்திருந்தால் அது எவ்வளவு தூரம் அவர்களுக்கே பிரதிகூலமாக இருக்கும் என்பதை பொதுமக்கள் உணர்வார்கள். அதிகாரிகளை வைத்துத் தான் ஒரு கட்சியை ஆளவேண்டும். அதிகாரிகளின் உதவிகளைக் கொண்டுதான் ஓட்டுக்களைப் பெறவேண்டும் என்று நினைத்திருப் போமானால் பிரிட்டிஷ்காரர்கள் ஆண்ட காலத்தில் அதிகாரிகளை வைத்துக்கொண்டிருந்தார்களே அவர்கள் இன்று ஆளுகிறார்களா என்று கேட்க விரும்புகிறேன். கட்சிப்பிரசாரம் என்று சொல்லும் நிலையில் சாதாரணமாக கார்போரேஷன் மேயர் ஒரு கட்சியின் சார்பாக வந்திருந்தும் அவர்கள் மாகாணத்திலே உள்ள இதர ஜில்லா தலைநகரத்திலும் எந்தவிதமான வேலைகளும் இருப்பதற்கில்லை, உத்தியோகத்தின் காரணமாக அல்லாமல் கட்சி சார்பாக........

(ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி எழுந்தார்.)

MR. SPEAKER : மேயரைப்பற்றி இந்தச் சபையிலே பேசுவது நல்லதல்ல.

SRI P. G. KARUTHIRUMAN : இப்பொழுது காங்கிரஸ் கட்சியின் அடிப்படை தத்துவத்தை எடுத்துச் சொன்னேன். சட்ட சபையிலே குற்றச்சாட்டுகள் சொல்லுகிற எதிர்க்கட்சிக்காரர்கள் வெளியிலே பேசுவதற்கு தைரியம் இருக்கிறதா என்று கேட்கிறேன். அவர்கள் மேடையிலே ஒரு பேச்சுப் பேசுகிறார்கள். சட்ட சபையிலே ஒரு பேச்சுப் பேசுகிறார்கள். வடநாட்டு கவர்னருக்கு ஒன்பது லட்சம் ரூபாய் சம்பளம் என்று சொல்கிறார்கள்—பத்திரிகையில் அச்சடித்திருக்கிறார்கள். கவர்னருக்கு 9 லட்சம் ரூபாய் சம்பளம் என்று இங்கே சொல்வதற்கு யாருக்காவது தைரியம் இருக்கிறதா ?

SRI A. GOVINDASAMY : Sir, the hon. Member has no right to mention the name of the Mayor in this House.

MR. SPEAKER : உங்களுக்குப் பேச அனுமதி கொடுக்கிறபோது நீங்கள் பேசுங்கள்.

SRI P. G. KARUTHIRUMAN : அப்படிப் பொறுப்பற்ற தன்மையிலே நாட்டிலே பேசுகிறார்களே என்பதற்காகத்தான் சொல்கிறேன். மீண்டும் சொல்கிறேன். சம்பளம் என்றால் சாலரி என்று பொருள், 9 லட்சம் ரூபாய் சம்பளம் என்றால் அது சரி அல்ல. கவர்னருடைய ஆட்களுக்கு, கவர்னர் சிப்பந்திகளுக்கு, பங்களா பராமரிப்பதற்கு என்று சொல்லி மொத்தம் 9 லட்சம் ரூபாய் என்று அச்சடித்த புத்தகத்திலே குறிப்பிட்டிருக்கிறார்கள். மேன்மை தங்கிய கவர்னர் 60 ஆயிரம் ரூபாய் சம்பளமாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அரசியல் நிர்ணயசபைத் தீர்மானம் செய்திருக்கிறது. அப்படியிருக்கும்போது வெளியிலே எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பேசும்போது வடநாட்டு கவர்னருக்கு 9 லட்சம் ரூபாய் சம்பளம் என்று சொல்லுகிறார்கள் என்றால் அவர்கள் பட்ஜெட்

புத்தகத்திலே இருப்பதைப் புரிந்து கொள்ளமுடியாத, உணர்ந்து கொள்ள முடியாத, தெரிந்துகொள்ள முடியாத நிலையிலே இருக்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

ஒரு ஜில்லாக் கலெக்டருக்கு 75 லட்சம் ரூபாய் சம்பளம் என்று சொன்னால் அது எவ்வளவு பொருத்தமற்றதாகயிருக்குமோ அது போல்தான் இது இருக்கிறது. அந்த ஜில்லாவிலுள்ள கணக்குப்பிள்ளை போன்ற எல்லா சிப்பந்திகளுடைய சம்பளத்தையும் சேர்த்து கொடுக்கப்படுகிறதே தவிர அது கலெக்டரின் சம்பளம் என்று சொன்னால் அதை மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். மக்களுக்கு அது தெரியும். ஆனால் மக்களுக்கு கவர்னரைப் பற்றி பூர்ணமாகத் தெரியாததால், இப்படிப் பொறுப்பற்ற தன்மையில் பேசக்கூடாது. பச்சை தமிழர் மந்திரிசபை என்று வானளாவப் புகழ்கின்றார்கள்.

"கணமலை நல்நாட கண்ணின் ஒருவர்
குணனேயும் கூறற்கரிதால்
குற்றம் உடைநின்று கூறும் சிறியவற்கு
அங்கு நின்றதோர் நா"

என்று நாலடியார் சொல்லியிருக்கிறார்கள். குணத்தைப் பற்றிக் கூட பேச நா கூசினால், தாறுமாறாகப் பேசுபவர்களின் நா எதனால் இயற்றப்பட்டதோ, ஆண்டவனே, தெரியவில்லை. ராம ராஜ்யத்திலுள்ள அமைச்சர்களின் தன்மை எப்படியிருக்குமோ அப்படியேயிருக்கிறது நமது அமைச்சரவையின் தன்மை, அமைச்சர்களின் தன்மை, கம்பன் கூறியிருக்கிறான் :

"நல்லவை தீயவை நாடி நாயகருக்கு
எல்லை மறுத்துவில் எல்லையியல்புவர்"

என்று. ஒரு வைத்தியன் ஒரு நோயாளியைப் பார்க்கும்போது, எது நல்லது எது கெட்டது என்று உணர்ந்து, எந்த மருந்தைக் கொடுத்தால் நோய் குணமாகும் என்று அறிந்து கொடுத்தால் தான் நோய் பூர்ணமாக குணமடையும். அப்பேர்பட்ட தன்மையுடையவர்கள்தான் உண்மையில் நல்ல மந்திரிகளாக இருக்க முடியும் என்று கம்பன் கூறியிருக்கிறான். அவர் கூறியிருப்பதற்கிணங்கத்தான் நமது அமைச்சர்கள் இருக்கிறார்கள். நடுநிலைமை தாங்கி மக்களின் நன்மைக்காக, மக்களின் சுபிட்சத்திற்காக பணியாற்றுவதில் நமது அமைச்சர்கள் தலைசிறந்தவர்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. வைத்தியன் என்ற முறையில் வேப்பம்பட்டை கஷாயம் கொடுத்துத்தான் தீரவேண்டும். கொய்னு கொடுத்துத்தான் தீரவேண்டும். அது கசப்பாகயிருக்கலாம். ஆனால் நோய் தீர அதை கொடுத்துத்தான் தீரவேண்டும். எதிர்க்கட்சிக்காரர்கள் வரிபோடுவது பற்றி சொன்னார்கள். கொடுக்கக்கூடிய மருந்தின் பயனை உணர்ந்து அதற்காகப் பயப்படாமல் பணி புரிந்து வருகிறது நமது மந்திரிசபை. அப்படி மக்களுக்கு நல்ல பணி புரிந்து கொண்டு வரும்போது, இதற்காகக் கூடுதல் நிதி ஒதுக்குங்கள் என்று என்று கேட்கிறார்கள். மற்ற ராஜ்ய மந்திரிசபைகளைப் பார்க்கும்

16th March 1961] [Sri P. G. Karuthiruman]

போது, இங்கு நமது மந்திரிகள் குறைவாகத்தான் பெற்றுக் கொண்டு வருகிறார்கள். கேரளாவில் .........

MR. SPEAKER : கேரளா சமாசாரத்தை இங்கு கொண்டு வரவேண்டாம்.

SRI P. G. KARUTHIRUMAN : பாக்கியுள்ள மந்திரிசபைகளிலுள்ள செலவை எடுத்துப் பார்த்தால் சென்னை அமைச்சரவையும், நமது அமைச்சர்களும் குறைவாகவே வாங்குகிறார்கள் என்றால், இந்தியாவிலேயே, ஏன் உலகத்திலேயே உள்ள நாடுகளை விட நம் நாடுதான் சிறப்பாகயிருக்கிறது. குறைந்த செலவில், நன்கு பணியாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கும் அமைச்சர்கள் சம்பந்தப்பட்ட இந்த மான்யத்தை எல்லோரும் பூர்ணமாக ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI K. ANBAZHAGAN : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இன்று கொண்டுவரப்பட்டிருக்கிற இந்த மான்யம் எவ்வளவு இன்றியமையாத கருத்துக்களை வலியுறுத்துவதற்கு, மிகச் சிறந்த ஜனநாயகப் பண்பாட்டைக் காப்பாற்றுவதற்கு அவசியமானது என்பதை அமைச்சர்கள் உணர்ந்திருப்பார்கள் என்று நம்புகிறேன். ஜனநாயகப் பண்பாட்டைக் காப்பாற்றுவதற்கு முனைகிற எவரும் எதிர்க்கட்சியினர் தருகிற பல்வேறு கருத்துக்களை எண்ணிப் பார்த்து அவைகளுக்குத் தக்க மாற்றுப் பதில் அளிப்பது மட்டுமல்லாமல் செயலில் அந்த ஆலோசனைகளை ஏற்று நடப்பது தான் சிறந்தது. எதிர்க்கட்சியினர் கூறுகிற அடிப்படையான உண்மைகளைக்கூட மறுத்துப் பேசுவதும், உண்மைக் கருத்துக்களை திரித்துப் பேசுவதும் எந்த ஆளும் கட்சிக்கும் அழகானதல்ல. அதனினும் ஆளும் கட்சியில் கொறடாவாகயிருக்கிற தகுதி பெற்ற நண்பர் அவர்கள் கவர்னர் அவர்களின் சம்பளத்தைப்பற்றிக் குறிப்பிட்டு அதைக் குறைக்க வேண்டும் என்று இங்கு கேட்பதற்குக்கூடத் தைரியம் இல்லாமல் வெளியில் மட்டும் தி.மு.க. வினர் பேசுவதாகக் கூறினர். ஒன்பது லட்சம் அளவு கவர்னர் பெறுவதாக யாரோ தி.மு.க. வினர் சொன்னதாக நினைத்துக் கொண்டு குறை சொன்னார். இந்தச் சட்ட மன்றத்தில் நாங்கள் பேசியிருக்கிற மிக முக்கியமான கருத்து கவர்னரே நமக்குத் தேவையில்லையென்ற கருத்தாகும். ஆகவே செலவழிப்பது 6 லட்சம்பேர் அல்லது 9 லட்சமோ என்பதைவிட, தேவையில்லாத ஒரு பதவியில் ஒருவரை உட்கார வைத்துவிட்டு அதற்காக ஐந்தாயிரம் அல்லது ஐம்பது ரூபாய் அளவு செலவழித்தாலும், பொதுமக்கள் வரிப் பணந்தான் பாழாகிறது என்ற குற்றச்சாட்டை இந்த அரசாங்கத்தின் மீது நான் நிச்சயமாக எடுத்துச் சொல்வேன். கவர்னர் பதவி எதற்கு என்று இங்கு கேட்ட நேரத்தில், அமைச்சர் அவர்கள், கட்சிகளிடையே வேறுபாடுகள் ஏற்பட்டுக் குழப்பம் வளரக்கூடிய நேரத்தில் மத்திய அரசாங்கச் சார்பாக, டில்லி அரசாங்கத்தினுடைய பிரதிநிதியாக அப்படி ஒரு கவர்னர் இருந்தால்தான்

11-30 a.m.

அந்நிலையில் மாகாணத்தைக் கட்டிக் காக்க முடியும் என்ற கருத்தை இச்சட்டமன்றத்தின் முன்னால் தெரிவித்தார்கள். குழப்பம் ஏற்படும் என்று எதிர்பார்த்து அதற்காக ஆண்டு தோறும் கையை விட்டு ஏறத்தாழ 6 லட்சம் ரூபாய் கவர்னர் பேரால் செலவழிக்கப்படுகிறது. இந்த ஆண்டு ஏறத்தாழ ஆறு லட்சம் தரப்படயிருக்கிறது. இந்த மானியத்தில் அமைச்சர்களுக்கு நாலு லட்சம் போக மிச்சம் 6 லட்சமும் கவர்னர் சம்பளத்தின் பெயரால் மட்டுமல்ல என்று சொன்னாலும் அவருடைய பதவிக்காக ஏற்படுகிற வேறு செலவுகளான, அவரது சுற்றுப் பயண வசதி, அவர் தருகிற விருந்திற்கான செலவுமாக ஆக எல்லாவற்றிற்கும் சேர்ந்து கொடுக்கப்படுகிறது. சென்ற ஆண்டில்—கவர்னர் பூந்தோட்டத்தை அழகு படுத்தவும், சீரியல் ஒதுக்கிய வகையில் கட்டிடம் பழுதுபார்க்கவும் 60,000 ரூபாய் ஒதுக்கியிருந்தார்கள் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. கவர்னர் மாளிகையையும், அவர்கள் ஏறிச் செல்கிற வாகனத்தையும் பராமரிப்பதற்கு எட்டு அமைச்சர்கள் அக்கறையோடு இந்த நாட்டில் பணியாற்றுகிறார்கள் என்றால் அவர்கள் கவர்னர் வீட்டில் வேலை பார்க்கவேண்டியவர்களே தவிர ஜனநாயகத்தை பாதுகாக்கக்கூடியவர்கள் அல்ல.

THE HON. SRI C. SUBRAMANIAM : அடக்கமாக பேசுங்கள். நாங்கள் போகவில்லை. நீங்கள் வேண்டுமானால் போகலாம்.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் அதைத் தவறாக எண்ணிக் கொண்டு மறுப்புப் பேசுகிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நீங்கள் இப்படிப் பேசினால், நாங்களும் இப்படித்தான் பேசுவோம்.

SRI K. ANBAZHAGAN : கவர்னருக்கு அரசாங்கம் இவ்வளவு பணம் ஒதுக்கித் தருவதால், அமைச்சர்களே அந்தப் பொறுப்பையும் ஏற்று கவர்னர் நிர்வாக வேலையைச் செய்யலாமே என்று தான் சொல்கிறேனே தவிர, அவர்கள் வீட்டு வேலைக்காரராகவோ சமயற்காரராகவோ அல்ல . . . . . . . .

MR. SPEAKER : சட்டசபையில் பேசும்போது மற்றவர்கள் மனம் புண்படாதபடி பேச வேண்டும், மரியாதையாகவும் பேச வேண்டும்.

SRI K. ANBAZHAGAN : நான் மாற்றுக் கட்சியினரைப் புண்படுத்துவதுபோல் பேசியதாகத் தலைவர் அவர்கள் தெரிவித்ததற்காக வருந்துகிறேன். நான் யாரையும் புண்படுத்த விரும்பவில்லை. கவர்னரை அரசாங்கத்தின் தலைவராக ஏற்றுக் கொண்டிருப்பதால் . . . . . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : அரசியல் சட்டத்தில் அப்படியிருக்கிறது. அதை நாங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். அதை ஏற்றுக்கொண்டுதான் நீங்களும் இங்கு வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள். அது வேண்டாமென்றால் வெளியே எழுந்து போங்கள்.

16th March 1961]

SRI A. GOVINDASAMI : Sir, the Hon. Minister has no right and no business to ask us to go out. He must withdraw those words.

(Several hon. Members both sides of the house rose.)

MR. SPEAKER : இது என்ன சப்தம்? இப்படி இருந்தால் எப்படி சபையை நடத்துவது? வெளியே போங்கள் என்று சொன்னால் . . . . . . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை ஒப்புக்கொள்ளவில்லையென்றால், வெளியே எழுந்து போகட்டும் என்று சொன்னேனே தவிர, வெளியே போங்கள் என்று சொல்லவில்லை.

(SRI M. P. Sarathi rose.)

MR. SPEAKER : திரு. சாரதி வேண்டுமானால் சபைத் தலைவராக வருவதில் எனக்கு ஆட்சேபணையில்லை. கனம் நிதியமைச்சர் அவர்கள் விளக்கிக் கூறியிருக்கிறார்கள், வெளியே போங்கள் என்று சொல்லவில்லையென்று. அதை நான் ஒப்புக்கொள்கிறேன். எல்லோரும் ஒரேயடியாகக் கோபித்துக் கொண்டால் எப்படி சபையை நடத்துவது? சபாநாயகருக்குக் கொடுத்திருக்கக்கூடிய பொறுப்பை நான்தான் ஏற்று நடத்தவேண்டும். ஆகவே தயவு செய்து யாரையும் யாரும் மனம் புண்படும்படி பேச வேண்டாம்.

SRI K. ANBAZHAGAN : திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் பேசுகிற நாங்கள் அமைச்சர் அவர்கள் ஆசைப்படுவது போலவோ அல்லது அவர்கள் விரும்புகிறபடியோ பேச இங்கு வரவில்லை. வெளியே போங்கள் என்று சொல்லிவிட்டால் உடனே வெளியே போய் விடவும் மாட்டோம். பொதுமக்கள் விருப்பப்படி அவர்கள் ஆதரவு பெற்று வந்திருக்கிறோம், அவர்கள் விரும்பினால் வெளியே செல்வோமே தவிர அமைச்சர்களின் விருப்பப்படி நடந்து கொள்ள நாங்கள் தேர்தலில் ஈடுபடவில்லை. அவர்கள் சொல்வதுபோல் செய்ய நாங்கள் இங்கு வந்து அமர்ந்திருக்கவில்லை. ஆனால் அமைச்சர்களின் தகுதியைக் குறைப்பதற்காகவும் நான் அவ்விதம் குறிப்பிடவில்லை.

MR. SPEAKER : அடுத்த பாயின்ட்-க்குப் போங்கள்.

SRI K. ANBAZHAGAN : கவர்னர் பதவியே தேவையில்லை என்று கருதுகிறவர்கள் நாங்கள். கவர்னர் பதவியைக் காப்பாற்ற வேண்டுமென்ற மனப்பான்மையுடையவர்கள் அல்ல நாங்கள். அவர்களுக்காகச் செலவிடப்படுகிற 6 லட்சம் அதிகம், தேவையற்றது என்று நாங்கள் மனப்பூர்வமாகக் கருதுகிறோம். இன்றுங்கூட நண்பர் கோவிந்தசாமி அவர்கள் அந்த ஊதியத்தைக் குறைக்கவேண்டுமென்றும், அவர்கள் பெயரால் ஆகின்ற செலவைக் குறைக்கவேண்டுமென்றும் வெட்டுத் தீர்மானம் தந்திருக்கிறார்கள். கவர்னர் நிர்வாகத்துக்கு ஆகும் இச்செலவு மிகவும் அதிகமானது என்று முன்பே நான் குறிப்பிட்டிருக்கிறேன், அதைத்

திரும்பத் திரும்பக் கூறவேண்டும், புதுக் கருத்துக்களை கூற வேண்டாமென்று ஆட்சியாளர் விரும்புகிறார்கள் போலும். அடுத்து இந்த மாநிலத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர் வைக்கச் சொல்லிக் கேட்டார்கள் மக்கள். அமைச்சர்கள் தமிழ் நாடு என்ற பெயரை மக்களுக்காக ஒப்புக்கொண்டார்களே தவிர அரசியல் சட்டத்தில் அதை இடம் பெறச் செய்ய வில்லை. கனம் நிதி அமைச்சர் சட்ட அமைச்சருங்கூட. தமிழ்நாடு என்ற பெயர் காண்ஸ்ட்டிட்யூஷனில், அரசியல் சட்டத்தில்—இடம் பெற என்ன தடையிருக்கிறது? அதில் என்ன தவறு ஏற்படக்கூடும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'தமிழ்நாடு' என்ற பெயரை ஏற்பதில்கூட பொது மக்களுடைய நியாயமான விருப்பத்தைக்கூட முழு அளவுக்கு நிறைவேற்றவில்லை. அந்த அளவுக்குத் தான் ஆட்சியாளர்கள் மக்களை மதித்து நிறைவேற்றுகிறார்கள். இந்த நிலைமையில் அமைச்சர்கள் எந்த அளவுக்கு ஜனநாயகத்தைக் காப்பாற்றப் போகிறார்கள்? இவ்வித நிலை இருந்தால் 'தமிழ் மொழிதான்' எந்த அளவுக்குக் காப்பாற்றப்படும் என்றும் தெரியவில்லை. அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் நாங்கள் தான் தமிழை காப்பாற்றி வருகிறோம் என்று சொல்லுகிறார்கள். அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் "போலீஸ் என்பதற்கு காவலர் என்று சொல்வதுகூட எனக்குப் பிடிக்கவில்லை, 'போலீஸ்' என்று சொல்வதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது. ஆகவே காவலர் என்று சொல்ல வேண்டாம், போலீஸ் என்றே இனி வைத்துக் கொள்ளலாம்" என்று இங்கேயே சொல்லியிருக்கிறார்கள். அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் திருக்குறள் படித்திருக்கிறார்களோ இல்லையோ நான் அறியமாட்டேன். போலீஸ் என்ற சொல்லுக்கு காவலர் என்பது சரியான, சிறப்பான தமிழ்ச்சொல். இதையே ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று சொன்னால் இவர்கள் தமிழை எப்படிக் காப்பாற்றப் போகிறார்கள், வளர்க்கப் போகிறார்கள் என்பதை நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். போலீஸ் என்ற சொல்லுக்குக் காவல் என்ற சொல்லைவிட சிறப்பான பொருள் தரக்கூடிய, சிறந்த கருத்துடைய சொல் வேறு கிடையாது. அதுமட்டும் அல்ல, திரு. திருமதி என்றும் மதிப்புக் குரிய அடைமொழிகளையும் இன்னும் இந்த அரசாங்கம் முழு அளவுக்கு வழக்கத்திற்குக் கொண்டு வரவில்லை.

இந்தச் சபையிலேயே கேள்விகள் கேட்கப்படும்போது, முதல் கேள்விக்குத் தரும் பதிலே தமிழில் இருக்க வேண்டும் என்று திரும்பத் திரும்ப பல உறுப்பினர்கள் இங்கு கேட்டுக்கொண்டிருக் கின்றனர். இப்போதுங்கூட ஆங்கிலத்தில் முதல் கேள்விக்கு விடை தரப்படுகின்ற காரணத்தால், பலர் அதை உடனடியாகப் புரிந்து கொண்டு, அடுத்த கேள்வியைக் கேட்பதற்கு வழியில்லாமல் தவாறு திகைக்கிறார்கள். இந்த நிலையில் கூடச் சட்டமன்றத்தில் தமிழிலேயே விடையளிப்பதற்குள்ள முயற்சிகளை இந்த ஆட்சி யாளர்கள் மேற்கொள்ளவில்லை. இதற்குக் காரணம் மக்களாட்

16th March 1961] [Sri K. Anbazhagan]

சியில் இருந்து கொண்டிருக்கின்ற இந்த ஆட்சியாளர்கள் மக்களது விருப்பத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ளாமல், அதை மறந்துவிடுவதுதான். ஆட்சியாளர் கருத்துத் தெளி வில்லாமல் எதையெல்லாமோ நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஜனநாயகத்தில் மக்களுடைய கருத்து என்ன என்பதில் நன்ருகத் தெளிவு பெற்றிருக்க வேண்டும். அது மட்டுமல்லாமல், ஜனநாயக நாட்டில் மக்களுக்குப் பிரசார வசதி இருக்கவேண்டும். பிரசாரம் செய்வதில் யார் தவறு செய்திருந்தாலும் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கப் போலீஸ் இலாகா முன் வரவேண்டும். இன்றைக்குத் திராவிட முன்னேற்றக் கழகத் தைச் சேர்ந்தவர்களோ அல்லது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த வர்களோ எந்த இடத்திலாவது பேசுகிருர்கள் என்றுல் அவர் களுடைய பேச்சுக்கள் போலீஸ் இலாகாவின் சுருக்கெழுத்தாளர் களால் குறிப்பு எடுக்கப்பட்டு உரிய இலாகாக்களுக்கு அனுப்பப் பட்டு அதன்பேரில் நடவடிக்கை எடுக்கப்படுகின்றது. அவ்விதம் தவருகப் பேசுபவர் யாராக இருந்தாலும் அவர்கள் பேரில் நட வடிக்கை எடுப்பதை நான் வரவேற்கிறேன். ஆனல் இன்றைக்கு காங்கிரஸ்காரர்கள் எப்படிப் பேசினும் அவர்கள்பேரில் எந்த விதமான நடவடிக்கையும் எடுப்பதில்லை. காங்கிரஸ்காரர்கள் பேசு வதைச் சுருக்கெழுத்தாளர்கள் குறிப்பெடுப்பதில்லை. தேர்தல் காலங்களிலாவது சில ஒழுங்கு முறைகளைக் கொண்டு வரவேண்டும். சில ஒழுங்கு முறைகளை விதித்து கட்டுப்படுத்த வேண்டும் என்று அமைச்சர் சொல்வது உண்மையாக இருந்தால், எதிர்க் கட்சித் தலைவர்கள் அல்லது உறுப்பினர்களையும் கொண்ட குழு ஒன்று அமைக்கப்படும். அந்தக் குழுவினரிடம், தேர்தல் நேரத்தில் யார் யார், திராவிட முன்னேற்றக் கழகத்தவராக இருந் தாலும், கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களாக இருந்தாலும் சரி, ஜனநாயக காங்கிரஸ்காரர்களாக இருந்தாலும் வெறும் காங்கிர சாராக இருந்தாலும் சரி, அவர்களுடைய பேச்சுக்கள் எல்லாம் குறிப்பெடுக்கப்பட்டு இந்தக் குழுவினருக்கு அனுப்பிவைக்கப் படட்டும். அதை இந்தக் குழுவினர் பரிசீலிக்கட்டும். இதற்கு அமைச்சர் அவர்கள் முன் வருகிருர்கள் என்றுல் உண்மையிலேயே காங்கிரஸ் கட்சியும் ஜனநாயகத்தைக் காப் பாற்றுவதற்கு முன் வருகிறது என்பது பொருள். இல்லா விட்டால் எதிர்க்கட்சிக்காரர்களை அடக்குவதற்காக மட்டுந்தான் இம்மாதிரியான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன என்றுதான் எடுத்துக்கொள்ள முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, இங்கு போலீஸ் இலாகாவைப்பற்றி நான் குறிப் பிட்டது, சில போலீஸ் அதிகாரிகளை ஆட்சியாளர்கள் பயன் படுத்துகிருர்கள் என்பதைப்பற்றித்தான். போலீஸ் இலாகா முழுவதும் என்பது அர்த்தமல்ல. போலீஸ் இலாகாவினரில் சிலர் தவருகப் பயன்படுத்தப்பட்டார்கள் என்று தான் குறிப்பிட்டேன். போலீஸ் இலாகாவில் சிலர் என்று குறிப்பிடும்போது அவர்கள்

[Sri K. Anbazhagan] [16th March 1961

பேரில் சொல்லப்படும் குற்றம் போலீஸ் இலாகாவைப்பற்றிய தாகத்தான் அமையும். ஆகவே இதில் நான் சொன்ன குற்றச் சாட்டை மறுத்துப் பேசுகின்ற வகையில் உண்மையை விளக்கியோ அல்லது இதைப்பற்றி விசாரணை செய்து முடிவு எடுக்கிறேன் என்றோ போலீஸ் அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் பதில் அளிக்கின்ற நேரத்தில் சொல்லியிருந்தால் உண்மையிலேயே ஜனநாயகப் பண்பு இவர்களிடத்தில் இருக்கிறது என்று நான் அதை வரவேற்றிருக்க முடியும். இந்தக் குறைகள் பற்றி விசாரிப்பேன் என்று சொல்ல முன் வரவில்லை. அந்த அள வுக்கு எதிர்க்கட்சியில் இருக்கின்ற நாங்கள் சொல்லுகின்ற கருத் துக்களில் அவநம்பிக்கை இருந்திருக்க வேண்டும். ஆனால் இன் றைய தினம் சேலம் உறுப்பினர் திரு. மாரியப்பன் அவர்கள் பேசும்போது சேலம் நகரத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தினர் பல்வேறு தவறான காரியங்களில் ஈடுபடுகிறார்கள் என்றும், அவர்கள் காங்கிரஸ்காரர்களைத் தாக்கினார்கள் என்றும் அதன் பேரில் போலீசாரிடம் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட் டுக்கொண்டதற்கு சரியான முறையில் நடவடிக்கை எடுக்கப்பட வில்லை என்றும் சொன்னார்கள். அப்படி திராவிட முன்னேற்றக் கழகத்தார் தவறு செய்திருந்தால் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கட்டும், ஆனால் நடுத்தெருவில் இழுத்துவந்து அடிக்காதீர்கள், அவமானப்படுத்தாதீர்கள். விவரங்களை அறிந்து நடவடிக்கை எடுங்கள், குற்றங்கள் இருந்தால் வழக்குத் தொடருங்கள் என்று தான் கூறுகிறேன். உண்மையான ஜனநாயக ஆட்சியாக இருந் தால் யார் தவறு செய்தாலும் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுத் திருக்க வேண்டும். அவ்விதம் வழக்குத் தொடர்ந்து கோர்ட்டில் திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ளவர்கள் 10 பேர்கள் தண் டிக்கப்பட்டால், காங்கிரஸ் கட்சியில் உள்ளவர்கள் எத்தனை பேர் கள் தண்டிக்கப்படுவார்கள் என்பதை என் மனசாட்சி அறியும். அம்மாதிரி முறையான நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று தான் கூறுகிறேனே தவிர திராவிட முன்னேற்றக் கழகத்தினர் என்றேனும் தண்டிக்கப்படுகிற நேரத்தில் அமைச்சரை நான் அணுகினதுமில்லை. ஆதரவு கேட்டதில்லை. தனிப்பட்ட எந்த வேண்டுகோளுக்கும் அமைச்சரிடம் வந்ததில்லை. எனவே முறைப் படி நடவடிக்கை எடுங்கள், யாரும் வேண்டாமென்று சொல்ல வில்லை. அதற்குக்கூட ஜனநாயக முறையில் போலீஸ் அமைச்சர் அவர்கள் முன் வரவில்லை. அப்படியானால் நீங்கள் எந்த அடிப் படையில் ஜனநாயகத்தைக் காப்பாற்றப் போகிறீர்கள், என் பதைத்தான் கேட்க விரும்புகிறேன்.

அடுத்து, சென்னை நகரத்தில் மாற்றுக் கட்சிகள் சம்பந்தப் பட்ட சுவரொட்டிகள் ஒட்டியதற்காக பலர் மீது எவ்வளவோ வழக்குகள் போடப்பட்டிருக்கின்றன. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த பல சுவரொட்டிகள் பல்வேறு இடங்களில் ஒட்டப்பட்டி ருந்தும் அதற்கு எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. குறிப்பாக ஓர் இடத்தில் இவ்விதம் சுவ

16th March 1961] [Sri K. Anbazhagan]

ரொட்டி ஒட்டியதற்காக ஒரு காங்கிரஸ் சார்பினரைப் போலீஸ் காரர் கைது செய்து, அதன் பேரில் வழக்குத் தொடுப்பதற்காக அதிகாரிகளிடத்தில் போனபோது, சற்று மேல் நிலையில் இருக்கின்ற அதிகாரி, 'இதுயெல்லாம் வீண் தகராறுகளை விளைவிக்கும், ஆகவே விட்டு விடுங்கள்' என்று சொன்னதின் பேரில் அவரை விட்டுவிட்டார்கள். இதிலிருந்து நான் குறிப்பிடுவது குற்றம் யார் செய்தாலும் இருந்தாலும் அவர்கள் பேரில் வழக்குப் போடுங்கள் என்பதுதான். ஒன்பது மணிக்குமேல் கூட்டம் நடத்தக் கூடாது என்று சொன்னால் எல்லோருக்கும் அது பொது விதியாக இருக்க வேண்டும். ஆனால் ஆளும் கட்சியினர் மீறிய போது—அவர்கள்மீது வழக்குப் போடப்படவில்லை. அதற்கும் மேலாக பஸ் முதலாளிகளிடமிருந்து நிதி வசூல் செய்கிறீர்கள் கட்சித் தேர்தல் நிதிக்காக என்று சொன்னால்—(மணியடிக்கப் பட்டது)—நான் பேசிய தொடரைக் கூறி முடித்துவிடுகிறேன்—அவ்விதம் அமைச்சர்கள் செய்யக்கூடாது என்று சொன்னால் பொருட்படுத்தவில்லை. மாறாக சோஷலிச முறைப்படி பஸ் முதலாளிகளுக்காக ஏராளமான வரி போட்டிருக்கிறோம் என்று கூடச் சொல்லக்கூடும். அண்மையில் முதலாளிகளுக்குப் பஸ் ஒன்றுக்கு 1,000 ரூபாய் வரி போட்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. அதன் மூலம் இந்த அரசாங்கத்தை நடத்தும் கட்சிக்கு வருமானம் வருகிறது என்பதால், அதைக் கொண்டு இந்த அரசாங்கமும் வாழ்க, வாழ்க என்று வாழ்த்தி என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM : கனம் தலைவர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மந்திரிகள் மிகவும் நல்ல முறையில் கட்சி சார்பற்ற முறையில் மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டுடன் சுற்றுப் பிரயாணம் செய்வதை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன். அவ்விதம் சுற்றுப் பிரயாணம் செய்வதை ஆதரிப்பதுடன் அதை வரவேற்கவும் செய்கிறேன். மந்திரிகள் ஊர் சுற்றுகிறார்கள், மக்களுடைய வரிப் பணத்திலிருந்து சுற்றுகிறார்கள், கட்சியை வளர்ப்பதற்காக ஊர் சுற்றுகிறார்கள் என்று குறிப்பிடுவதை நான் மறுக்க விரும்புகிறேன். என்னைப் பொறுத்தவரையில் நான் குறிப்பிட்டுக் கொள்வது என்னவென்றால், எங்கள் தொகுதிக்கு மந்திரி வரும்போது, பொதுவாக சில வேலைகளை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று காங்கிரஸ்காரர்களாகிய நாங்கள் சொல்லும்போது, நாம் இதை உடனேயே செய்தால், நாம் நிர்வாகத்தில் அவசியமில்லாமல் ஈடுபடுவதாக இருக்கும், ஆகவே இதைப் பற்றிப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லி விடுகிறார்கள். அதோடு நாங்கள் சொல்லுகின்ற கோரிக்கைகளை எல்லாம் உடனடியாக ஏற்றுக்கொண்டு உத்தரவு போடுவதில்லை, இந்த முறையில் ஆளும் கட்சியில் இருக்கின்ற நாங்கள் சொல்லுகின்ற காரியங்களையே அமைச்சர்கள் கவனிப்பதில்லை. அவ்விதம்

ஏதாவது கேட்பதாக இருந்தாலும் கூட, இதனால் ஏதாவது அவதூறுகள் வராமல் இருக்குமா, இதனால் நிர்வாகத்தில் ஏதாவது தகராறுகள் ஏற்படாமல் இருக்குமா என்பதையெல்லாம் யோசித்துப் பார்த்துவிட்டு பின்னால் வாருங்கள் என்று எங்களுக்கே பதில் சொல்லிவிடுகிறார்கள் நமது அமைச்சர்கள் என்பதைத் தாழ்மையாகத் தெரிவித்துக்கொள்கிறேன். பொதுவாக மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்வது மிகவும் அவசியம், அவ்வாறு செய்தால்தான் ஒவ்வொரு தொகுதியிலும் வேலைகள் எல்லாம் துரிதமாக நடக்கிறது என்பதை அந்தந்தத் தொகுதி மக்கள் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். ஆகவே அடிக்கடி மந்திரிகள் தொகுதிகளுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது அதிகாரிகளையும்கூட வைத்துக் கொண்டு அவர்களுடைய உதவியினாலும் கட்சியை வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. அவ்விதம் அதிகாரிகளுடைய பலத்தினால் கட்சியை வளர்த்துக்கொள்ள முடியும் என்றிருந்தால், அன்றைக்கு அந்நியரின் ஆட்சி இருந்த காலத்தில், இன்றைக்கு எதிர்க்கட்சியில் இருக்கின்ற சில கட்சி அவர்களோடு சேர்ந்திருந்த காலத்திலும் காங்கிரஸ் கட்சி பலத்தோடு நின்று போராடித்தான் இந்நாட்டுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்தது. அப்படிப்பட்ட காங்கிரஸ் கட்சிக்குப் பலம் தேடுவதற்கு அதிகாரிகளுடைய ஒத்துழைப்பு அவசியமில்லை. ஆகவே அதிகாரிகளை கூட்டிக் கொண்டுபோவதால், கட்சியை வளர்த்துவிட முடியாது, அதே சமயத்தில் குறைகளை அவர்களிடத்தில் எடுத்துச் சொல்ல முடிகிறது. சில குறிப்பிட்ட இடங்களுக்குப் போகும்போது, அந்த இடத்திற்கு வேண்டிய கால்வாய் வசதி, பாதை வசதி மற்றும் பல வசதிகள் இவைகள் எல்லாம் வேண்டும் என்று கேட்க முடிகிறதே தவிர வேறு ஒன்றுமில்லை.

அடுத்ததாக, கவர்னரைப் பற்றி இவர்கள் எடுத்துச் சொல்லுகின்றபோது மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. கவர்னர் வந்து உரை நிகழ்த்தும்போது அவர்களுடைய உரையை நாங்கள் கேட்க மாட்டோம் என்று சொல்லி வெளியே சென்றுவிட்டு, பின்னால் இங்கு வந்து அவர்களுடைய சம்பளம் அதிகம், அவர்களுக்கு இத்தனை வசதிகள் எதற்காக என்றெல்லாம் பேசுகிறார்கள். அதே சமயத்தில் இதே கட்சியினர் இருக்கின்ற ஸ்தாபனங்களில் கவர்னரை வரவேற்று, அவரைப் பாராட்டிச் சீராட்டிப் பேசுவதையும் நாம் இரண்டு நாட்களுக்கு முன்பு பத்திரிகையில் பார்த்தோம். இவ்விதம் இங்கு ஒரு பேச்சும், வெளியில் ஒரு பேச்சுமாகப் பேசுகின்ற இவர்களை எப்படி நம்புவது என்றே தெரியவில்லை. கவர்னர் ஆட்சிப் பொறுப்பில் இருக்க வேண்டும் என்று சொல்லும்போது, கவர்னர் இருந்தாக வேண்டும் என்று சொல்லுகின்ற அரசியல் நிர்ணய அமைப்பின்மீது சத்தியம் செய்துகொண்டு இங்கு வந்துவிட்டு பின்னால் இது முறைதானா, இது முறைகேடு அல்லவா என்றெல்லாம் பேசுவது முறையற்றதாக இருக்கிறது என்பது

16th March 1961] [Srimathi Rajathi Kunjithapatham]

என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதேசமயத்தில் இந்த மான்யத்தைப்பற்றி பேசுகின்ற நேரத்தில் அதிகாரிகள் மந்திரிகள் வரக்கூடாது என்பதைப்பற்றி எல்லாம் பேசப்பட்டது. அதிகாரிகள் மந்திரிகளுடன் வரும்போது சில இடங்களிலுள்ள மக்கள் அவர்கள் அனுப்பிய மனு என்னவாயிற்று, அந்த ஃபைல் எங்கேயிருக்கிறது என்பதுயெல்லாம் தெரியாமல் இருக்கிறார்கள். இம்மாதிரி மந்திரிகள் வரும்போது அதிகாரிகள் வந்தால் இதைப்பற்றி அவர்களிடத்தில் எடுத்துச் சொல்ல முடிகிறது. ஆகவே அதிகாரிகள் மந்திரிகளுடன் வருவது பொதுமக்களுடைய நன்மைக்காகத் தானே தவிர கட்சியை வளர்ப்பதற்காக அல்ல. அமைச்சர்களுடைய சுற்றுப் பிரயாணத்தினால் பலன் அடையக் கூடியவர்கள் பொது மக்கள்தான்—வேறு யாருமல்ல. அமைச்சர்களுடைய சுற்றுப் பிரயாணத்தில் கட்டுப்பாடு ஒன்றும் செய்ய முடியாது. அந்த நிலையில் இந்த மாதிரி அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்வதை நான் வரவேற்கிறேன். அதே போல கவர்னரும் நாட்டினுடைய தேவையாக இருக்கிறார்—அரசியல் சட்டப்படி அவர்களும் செயல்படவேண்டியதுதான். அவர்களுக்குக் கொடுக்கும் சம்பளம் ஒன்றும் அவ்வளவு அதிகமல்ல. கணக்குப் போட்டுப் பார்த்தால் மாதம் ஒன்றுக்கு 5,000 ரூபாயோ என்னமோதான் வருகிறது. நமது மந்திரிகளுக்கும் குறைச்சலாகத்தான் கொடுக்கிறோம். நமது சர்க்காரில் இருக்கக்கூடிய சீஃப் என்ஜினியருக்கு ஆயிரமாயிரம் ரூபாய் கொடுக்கும்போது, ஒரு மாநிலத்தின் தலைவராக செயல்படக்கூடிய கவர்னருக்குக் கொடுக்கக்கூடிய சம்பளம் ஒன்றும் அதிகமல்ல. அவர்கள் பராமரிக்கக்கூடிய சொத்து அத்தனையையும் சேர்த்துக் கணக்கிட்டுத்தான் அந்தத் தொகை கொடுக்கிறோம். இந்த நிலையில் கவர்னர் அவர்களை பாரம் என்று நினைப்பது நியாயமல்ல. அவர்களுடைய சேவை நமக்குத் தேவையாக இருக்கிறது. ஆகையால் அந்த முறையில் பேசுவது நியாயம் அல்ல என்று கூறி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக் கூடிய மான்யங்களை ஆதரித்து எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : இப்போது கட்சித் தலைவர்கள் பேசுவார்கள். ஒவ்வொரு தலைவரும் 15 நிமிஷங்கள் பேசலாம். 13 நிமிஷம் ஆனதும் மணி அடிக்கிறேன். 15 நிமிஷத்தோடு சரியாக முடித்துக் கொள்ளவேண்டுமென்பதை நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணைகளை நான் ஆதரிக்கிறேன். இது தேர்தல் நெருங்கக்கூடிய வருஷமாக இருப்பதால் சபையிலே உஷ்ணம் அதிகரிக்கிறது—வெளியிலேயும் உஷ்ணம் அதிகரிக்கிறது. தேர்தலைப் பற்றி நாங்கள் அதிகம் கவலைப்படவில்லை. ஐந்து

வருஷத்திற்கு ஒரு முறை போதும்—வரும். அது பிரதானமல்ல. மக்களும் நாடும் தான் பிரதானம். மக்களிடத்தில் எத்தகைய பண்பாட்டை வளர்க்கிறோம் என்பதைப் பார்க்க வேண்டியிருக்கிறது—இதிலே அரசியல் கட்சிகளுக்கெல்லாம் ஒரு பொறுப்பு இருக்கிறது. அதிலும் ஆளும் கட்சிக்குப் பொறுப்பு அதிகம் என்று நினைக்கிறேன். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களை இழிவுபடுத்தி தாக்கிப் பேசுவது, எழுதுவதால் இருக்கும் செல்வாக்கை குறைத்துவிடவேண்டும்—முடியும்—என்று சொல்லும் அளவுக்கு நாங்கள் விஷயம் தெரியாதவர்கள் அல்ல. அதே போன்று ஆளும் கட்சியில் இருப்பவர்களும் எதிர்க்கட்சிகளை நடத்தும் முறையில் கண்ணியமும் கௌரவமும் இருக்கவேண்டும். அரசாங்க வசதிகளைப் பயன்படுத்திக் கொள்வதிலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பது எனது அபிப்பிராயம். அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்வதை ஆட்சேபிக்கவில்லை—சுற்றுப்பிரயாணம் அவசியம். ஆனால் என்ன நோக்கத்தோடு எப்படிச் சுற்றுப் பிரயாணங்கள் செய்கிறார்கள் என்பதுதான் முக்கியம். சுற்றுப் பிரயாணம் செய்கிற நேரத்தில் எதிர்க் கட்சிகளைத் தாக்குவதே ஒரு கொள்கையாக வைத்துக் கொண்டு எது வேண்டுமானாலும் பேசித் தாக்கலாம் என்ற போக்கிலே போவதுதான் வருத்தத்தைத் தரக் கூடியதாக இருக்கிறது. முக்கியமான மான்யம் இன்றைய தினம் விவாதத்தில் இருக்கும்போது முதல் அமைச்சர் சுற்றுப் பிரயாணத்தில் இருக்கிறார். சில சமயங்களில் வெள்ளம் வருகிறது, புயல் அடிக்கிறது என்றால் அந்த சமயத்தில் அவசரமாகச் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள்—அதை நான் வரவேற்கிறேன்; அது அவசியமும் கூட. நேரடியாக மக்களுக்கு உதவி செய்யப் போகிறார்கள். நாங்கள் கூட சில சமயங்களில் வர முடியாமல் இருக்கலாம்—ஏதாவது கட்சிக் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டியிருந்தால் வர முடியாமல் இருக்கலாம். அந்த மாதிரி ஏதாவது கட்சிக் கூட்டம் இருந்தாலும் வராமல் இருக்கட்டும், பரவாயில்லை. ஹெட் ஆஃப் ஸ்டேட், மினிஸ்டர்ஸ் விவாதத்திலே இருக்கும்போது என்ன அவ்வளவு மிக முக்கியமான சுற்றுப் பிரயாணம் என்று எனக்குத் தெரியவில்லை. அதுவும் நமது முதல் அமைச்சர் அவர்கள் ரோமிங் அம்பாஸடார் என்ற மாதிரி குறிப்பிட்ட ஒரு பொறுப்பும் இல்லாமல் போகக்கூடிய வசதி இருப்பதால், நமது முதலமைச்சர் அவர்கள் முதல் தர அரசியல் பிரசாரகராக இருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல—முதலமைச்சராக இருக்கின்றவர் எல்லா மக்களையும் எல்லாக் கட்சிகளையும் அணைத்துக்கொண்டு போகக்கூடிய அளவுக்கு இருக்கவேண்டும், அப்படியில்லாமல் எதிர் கட்சி என்றால் எதிர்க்க வேண்டியவர்கள் என்ற முறையில் பணிபுரிவது நாட்டுக்கு நல்லதல்ல என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இன்றைக்கு முக்கியமான பொது நிகழ்ச்சிகள் இருக்கின்றன. கட்சிக் கூட்டங்களில் திட்டட்டும்—நான் வேண்டாமென்று சொல்லவில்லை. சில இளைஞர்களைத் தூக்கி விட்டு எதிர்க் கட்சியினரைப் பற்றி ஜீவானந்தத்திற்குக் காது செவிடு,

16th March 1961] [Sri M. Kalyanasundaram]

கல்யாணசுந்திரத்திற்கு இருதயம் இல்லை, ராமமூர்த்திக்கு கால் நொண்டி, அண்ணுதுரை 4½ அடி, அவர் ஜாதி, அது இது எல்லாம் பேசி விடுவார்கள். அடுத்தபடியாக வரக்கூடிய அமைச்சர்கள் அதைப் பற்றிப் பேசமாட்டார்கள்—அமைச்சர்கள் திட்டத்தைப் பற்றியெல்லாம் பேசுவார்கள். திராவிட முன்னேற்ற கழகத்தினர் பேசுவதை நான் ஆதரிக்கவில்லை. அவர்களும் கிட்டத்தட்ட அதே மாதிரி மட்டமாகத்தான் பேசுகிறார்கள் என்று எனது கவனத்திற்கு வந்திருக்கிறது. சேலத்தில் நடப்பதில் எதிர்க் கட்சிகள் யோக்கியமாக இருக்கிறார்கள் என்று சொல்லவில்லை. இரண்டு பக்கத்திலும் தவறு இருக்கத்தான் செய்கிறது. இரண்டு சாரார்களும் இரண்டு அரசியல் கட்சிகளைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பது எனது அபிப்பிராயம். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த ஊழியரைக் கூட்டத்தில் ஏன் பேசினாய் என்று அடித்து மாரியப்பன் படத்திற்கு முன் நிறுத்தி 'வணக்கம் செலுத்து; விட்டுவிடுகிறேன்' என்று சொல்லி. . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது சொன்னவைகளை உண்மை என்று எடுத்துக் கொள்ளத் தயாராயில்லை.

SRI M. KALYANASUNDARAM : இந்த மாதிரி பேசுவது சரியல்ல. எங்கள் கட்சி அப்படியல்ல. எங்கள் கட்சி சம்பந்தப்பட்ட மட்டில் அவசரப்பட்டு அதிகாரத்திற்கு வர விரும்பவில்லை. மந்திரிகளையும் மற்ற கட்சிக்காரர்களையும் இழிவுபடுத்தி அதிகாரத்திற்கு வர விரும்பவில்லை. ஆனால் நல்ல அரசியல் பண்பாடு வளர வேண்டும் என்பதுதான் எனது அபிப்பிராயம். உதாரணமாக ஒரு கட்சியைச் சேர்ந்தவர் எந்த அளவு பேச வேண்டும் என்ற நியதி வேண்டும்—ஒரு ஒழுங்கு வேண்டும். இதைப் பற்றி நான் பல முறை வற்புறுத்தியிருக்கிறேன். தேர்தல் வருகிறது. அந்தக் காலத்தில் மட்டுமல்லாமல் எப்போதும் உஷ்ணத்தைத் தவிர்த்து பலாத்கார நிகழ்ச்சிகள் நடக்காமல் நடவடிக்கை எடுக்க வேண்டும். அமைச்சருக்கு எல்லாரும் பேசிய பின் கடைசியாகப் பேசும் வசதி இருக்கிறது. எங்களுக்கு ¼ மணி கிடைத்தால் அவருக்கு ¾ மணி கிடைக்கிறது. எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து தேர்தல் எப்படி நடப்பது, பிரசாரம் எப்படி நடத்த வேண்டும் என்பதில் ஒரு வரையறை இருக்கவேண்டும். தொழிற் சங்கத்தில் இந்த மாதிரி இருக்கிறது. இதற்கு ஒரு கோட் ஆஃப் டிஸிப்ளின் ஏற்படுத்தினோம். கோட் ஆஃப் காண்டக்ட் என்பது தொழிற் சங்கத் தலைவர்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியது. முதலாளிகள் எப்படி நடக்க வேண்டும், சர்க்கார் எப்படி நடக்க வேண்டும், தொழிலாளர்கள் எப்படி நடக்க வேண்டும் என்பதில் ஒரு வரையறையை—நியதியை—ஏற்படுத்தி இருக்கிறார்கள். நம் அரசியல் கட்சிகள் ஒன்று சேர்ந்து ஒரு கோட் ஆஃப் காண்டக்ட்—ஒழுங்குமுறை விதிகளை ஏற்படுத்திக்

கொண்டு அந்த முறைகளைக் கையாளவேண்டும். இந்த மாதிரி
நியதிகளை ஏற்படுத்தி எல்லோரும் அவற்றை கடைபிடித்தோ
மானால் புகார்களுக்கு இடமிருக்காது. இன்றைய தினம் நான்
பல உதாரணங்களைக் கொடுக்க முடியும்—ஆனால் நேரம்
இல்லை. இன்றைய தினம் சர்வீஸ் கமிஷனில் எப்பேர்ப்
பட்டவர்கள் நியமிக்கப்படுகிறார்கள்? சர்வீஸ் கமிஷனில்
5 வருஷத்தில் நியமிக்கப்பட்டவர்கள் மூன்று பேர்கள். அந்த
3 பேர்களில் 2 பேர்கள் பழுத்த காங்கிரஸ்காரர்கள். ஒருவர்
பழுத்த காங்கிரஸ்காரர். இன்னொருவர் காங்கிரஸ்காரராகத்
தேர்தலில் நின்று தோற்றதற்கு நஷ்ட ஈடாகக் கொடுக்கப்பட்
டிருக்கிறது. அரசியல் கருத்தே இல்லாதவர்களைத்தான் நியமிக்க
வேண்டுமென்று நான் சொல்லவில்லை. எதிர்க் கட்சியினராக இருந்
தால் இந்த மாதிரி கொடுப்பீர்களா? இந்த உத்தியோகஸ்தர்கள்
ஒரு க்வாஸி-ஜுடிஷியல் ஆபீஸர் என்ற முறையில் எந்தவிதமான
விருப்பும் வெறுப்பும் இல்லாமல் பணியாற்ற வேண்டியவர்கள்.
அந்த முறையில் சிறந்த ஊழியர்களைப் பொறுக்குவதில் கட்சிச்
சார்புள்ளவர்களை நியமிப்பது நியாயமல்ல. இதைத் தயவுசெய்து
சிந்தித்துப் பதில் தாருங்கள். இன்று மாணவர்களைத்
தேர்ந்தெடுக்கப் பல கமிட்டிகளைப் போடுகிறார்கள். ஒரு
கட்சி சார்புள்ளவர்களைத்தானே போடுகிறார்கள். அதனால்தானே
பல கோளாறுகள் ஏற்படுகின்றன. எதிர்க் கட்சிகளை ஒத்துழைக்க
வேண்டுமென்று வேறு கூறுகிறார்கள். எப்படி ஒத்துழைக்க
வேண்டுமென்று கூறுகிறார்கள்? நம் நாட்டிலே சோஷலிஸ
சமுதாயம் அமைய, ஜனநாயக பண்பாடு வளர எதிர்க்
கட்சிகளில் ஒத்துழைப்பு எந்த முறையில் வேண்டுமென்று
சொல்லுங்கள்—நாங்கள் தயாராக இருக்கிறோம். நாங்கள் செய்
வதைப் பற்றித் துதி பாடவேண்டுமென்று சொன்னால்
நாங்கள் எப்படி ஒத்துழைப்பைக் கொடுக்க முடியும்?
இன்றைய தினம் அமைச்சர்கள் செய்கிற பிரச்சாரத்தை
12 noon. எடுத்துப் பாருங்கள். முதல் மந்திரி அவர்கள் சுற்றுப்பிரயாணம்
செல்லும்போது, எதிர்க் கட்சிப் பஞ்சாயத்து போர்டு தலைவர்
களாக இருந்தாலும் வரவேற்பு கொடுக்கிறார்கள். அமைச்சர்கள்
யார் வந்தாலும் வரவேற்பு கொடுக்க வேண்டுமென்று கம்யூனிஸ்டு
களாக இருந்தாலும் செய்கிறார்கள். அமைச்சர்களிடத்திலே
குறைகளைச் சொல்லுங்கள் என்று கூறுகிறார்கள். அப்படி
அமைச்சர்களிடத்திலே தங்கள் குறைகளை வரவேற்பில் எடுத்துச்
சொல்லிவிட்டால், "இங்கு கட்சிப் பிரசாரத்தை ஆரம்பித்து
விட்டீர்களா, உட்கார்" என்று முதல் மந்திரி சொல்கிறார். இது
சரியா? எத்தனை பொதுஜனங்கள் பக்கத்தில் இருக்கிறார்கள்?
பொதுஜனங்களைப் பார்த்து "எதிர்க் கட்சியினருக்கு ஓட்டு அளித்
தீர்களே, அதனாலேதான் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்று
சொல்கிறார்கள். வேறொரு இடத்தில் நிதி மந்திரி அவர்கள் "மல்டி
பார்ட்டி" அமைப்புகள் ஏற்படவேண்டும். "மல்டி பார்ட்டி" பல
கட்சி அதிகாரத்தில் இருக்கும் சூழ்நிலை உருவாகலாம், அவர்கள்
அதிகாரத்தை ஏற்று நடத்த வேண்டுமென்று குறிப்பிட்டார்கள்

16th March 1961] [Sri M. Kalyanasundaram]

என்று நினைக்கிறேன். அதே அடிப்படையில் நடக்க வேண்டுமென்று குறிப்பிட்டார்கள். பல ஜில்லாக்களிலே, பல முனிசிபாலிடிகளிலே மாற்றுக் கட்சியினர் ஆட்சி செலுத்தி வருகிறார்கள். மத்திய சர்க்கார் ஒரு கட்சியாக இருக்கலாம். "மல்டி பார்டி" இருப்பதிலே கம்யூனிஸ்ட் கட்சிக்கு எப்போதும் ஒரு உடன்பாடு இருந்து வருகிறது. அதன்படி கம்யூனிஸ்டுகள் ஆட்சிக்கு வருவதாக இருந்தால்கூட இப்படிச் சொல்லமாட்டார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது சொல்ல மாட்டார்கள்தான்.

SRI M. KALYANASUNDARAM : நாங்கள் எப்போதும் நீதியுடன்தான் நடப்போம். எல்லா கட்சிக்கும் சுதந்திரம் கொடுப்போம். மாற்றுக் கட்சிகளாக இருந்தாலுங்கூட அவைகளுக்கும் கட்டாயமாக சுதந்திரத்தைக் கொடுப்போம். இதுதான் கம்யூனிஸ்ட் கட்சியினுடைய கருத்தும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கொடுப்பார்கள், கொடுப்பார்கள் சுதந்திரம்.

SRI M. KALYANASUNDARAM : ஏன், உங்களைக் கவிழ்ப்பதற்கும் சுதந்திரம் கொடுத்தோமே. நீங்கள்தான் எங்களை ஒழிக்க வேண்டுமென்று சொல்கிறீர்கள். அப்படிப்பட்ட ஒரு பண்பாடு வளர்வதற்கு உதவியாக இருக்கவேண்டுமென்பதற்காகத்தான் சொல்கிறேன்.

தவிர, மாற்றுக் கட்சியினர் ஆட்சி செலுத்தக்கூடிய முனிசிபாலிடிகளுக்கு இடையூறு செய்கிறார்கள். கோயம்புத்தூரில் மாற்றுக் கட்சியினர் முனிசிபாலிடி இருக்கிறது. சென்னை நகர சபையைப் பற்றி ஏற்கனவே இங்கு சொன்னார்கள். அவர்கள் அமைச்சர்கள் முன்னாலே சென்று பேசுவதற்குக்கூட முடியாது என்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இது கட்சியை ரொம்பவும் பாதிக்கிறது. இந்த மாதிரி காரியங்கள் செய்யக் கூடாது.

சுற்றுப் பிரயாணம் செய்வது நல்ல காரியம்தான், செய்யட்டும். நான் வேண்டாமென்று சொல்லவில்லை. செலவு அதிகம் ஆகிறது என்று சொல்கிறார்கள். அதைப் பற்றியும் நான் குறை கூறவில்லை. ஆனால் அமைச்சர்கள் எளிய வாழ்க்கையை நடத்திக் காட்ட வேண்டும். அதற்காக சம்பளத்தை 300 ரூபாயாகக் குறைக்கலாம் என்றாலும், பரவாயில்லை. அப்படி சம்பளத்தை 300 ரூபாயாகக் குறைத்தாலும், அதிலே அதிக மிச்சத்தையும் காட்டிவிட முடியாது. எல்லா மந்திரிகளுக்கும் சம்பளமும், பிரயாணச் செலவும் சேர்ந்து மொத்தம் 10 லட்சம்தான் ஆகிறது. இதை ஒரு பெரிய தொகையாக நான் நினைக்கவில்லை. அவர்களுடைய சுற்றுப் பிரயாணச் செலவைப் பார்த்தால் 3 லட்சம்தான் ஆகிறது. இந்த 3 லட்ச ரூபாயிலே எவ்வளவு மிச்சப்படுத்தினாலும், அது ஒரு

[Sri M. Kalyanasundaram] [16th March 1961

பெரிய சிக்கனமாக ஆகிவிடாது. மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக தாங்கள் எளிய வாழ்க்கை நடந்து காட்ட வேண்டு மென்றுதான் சொல்கிறேன். அப்போது தான் மற்றவர்களும் சிக்கனமாக நடப்பார்கள். நம்முடைய பட்ஜெட் 90 கோடி வந்தி ருக்கிறது. இந்த 90 கோடி ரூபாயிலே பல திட்டங்களை நாம் செய்ய இருக்கின்றோம். ஆகவே மேலிடத்தில் சிக்கனமாக இருந்து காட்டினால், பல துறைகளிலே இருக்கக்கூடியவர்களுக் கும் சிக்கனமாக இருக்க ஒருவழி செய்தவர்களாவோம். அதே சமயத்தில் இதிலே சர்க்கார் கட்சி நலனுக்காக எதையும் உப யோகப் படுத்தக்கூடாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தவிர, அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செல்லக்கூடிய காலத் திலே ஏழைகள் வீட்டுக்கு வந்து உட்காரட்டும். நாங்கள் வர வேற்கிறோம். பெரிய நிலப் பிரபுக்கள், முதலாளிகள் வீட்டிலே தயவு செய்து தங்க வேண்டாம். அவர்கள் கட்டியுள்ள கெஸ்ட் ஹவுசிலும் தங்க வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். இது கட்சி நலனைக்கூட பாதிக்கும். தவிர, இப்படி அமைச்சர்கள் வந்து முதலாளிகள் வீட்டிலும், நிலப் பிரபுக்கள் வீட்டிலும் தங்கி விட்டுச் சென்ற பிறகு, அவர்கள் தங்களுடைய சுய நலத்திற்காக அதிகாரிகளைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். அதிகாரிகளும் பயந்து, மந்திரியே வந்துவிட்டுப் போயிருக்கிறாரே என்று அவர் கள் சொல்லக்கூடிய காரியத்தைச் செய்யவேண்டியவர்களாக இருக்கிறார்கள். இதற்குப் பல உதாரணங்கள் கொடுக்க முடியும். அதிலும் குறிப்பாக பஸ் முதலாளி இவர்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். இவர்களும் அவர்களை நம்பியிருக்கிறார்கள். அவர்களால்தான் காங்கிரஸ் பலப்படுத்த முடிகிறது என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் பணம் நிறைய இருந் தாலும், பஸ் முதலாளிகள் கொடுக்கக் கூடியதையும் வாங்கிக் கொள்ளலாம் என்றும், ராஜ்ய சர்க்கார் கஜானாவில் 70 லட்சம் ரூபாய் கொடுத்தாலும், அந்த 70 லட்சம் காங்கிரஸ் கஜானாவுக்கு வர முடியாதே என்று பரஸ்பர ஒப்பந்தமோ, என்னவோ, தெரியாது. அப்படியிருந்தால், நாட்டிலே நல்ல பண்பட்ட அதிகாரவர்க்கத்தின் ஒழுங்கை நிறைவேற்றப் பயன்படாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பஸ் முதலாளிகள் கதர் சொக்காயை மாட்டிக்கொண்டு, முதல் மந்திரியுடன் பவனி வருகின்றதன் காரணமாக, அங்கிருக்கக்கூடிய அதிகாரிகள் தங்கள் கடமையை நிறைவேற்ற முடியாமல் இருப்பது எனக்குத் தெரியும். அந்த நிலைமைதான் இன்று நாட்டிலே ஏற்பட்டிருக்கிறது. உதா ரணம் கொடுக்க விரும்பவில்லை. மந்திரிகள் சுற்றுப்பிரயாணத்தின் போது தங்குவதற்கு வசதி வேண்டுமென்றால், புதுக் கட்டிடங்கள் வேண்டுமானாலும் வசதியாக கட்டிக் கொள்ளட்டும். ஆட்சேபணை இல்லை. கனம் நிதி மந்திரி அவர்கள் டெல்லியிலே ஒரு ரெஸ்ட் அவுஸ் கட்ட வேண்டுமென்று சொன்னபோதுகூட, நான் அதை ஆதரித்துத்தான் பேசியிருக்கிறேன். செலவைத்தான் குறையுங் கள் என்று சொன்னேன். வசதியாக ஏர்கண்டிஷன் கட்டிடங்களை

16th March 1961] [Sri M. Kalyanasundaram]

வேண்டுமானுலும் கட்டிக் கொள்ளட்டும். ஆனுல் எல்லாக் கட்சி களுக்கும் சம சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்றுதான் நான் கேட்டுக்கொள்கிறேன். எதிர்க் கட்சியினர்கூட ஜீப் காரில் வர வேண்டுமென்று விரும்பினுலும், அவர்களுக்குச் சந்தர்ப்பம் கொடுப்பதில்லே. வேண்டுமானுல் மேலுக்குப் பேசலாம். அநேக மாக மந்திரிகளேச் சந்திப்பதற்கே சந்தர்ப்பம் இருப்பதில்லே. இருந்தாலும், எதிர்க் கட்சியினருக்கும் சம சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தேர்தல் வேலேகளில் எல்லாக் கட்சிகளின் ஒத்துழைப்பும் வேண்டுமென்று கூறப்படுகிறது. அப்படிப் பெற வேண்டுமென்று அமைச்சர் அவர்களும் சொல்கிருர்கள். உதாரணத்திற்கு சொல் கிறேன். எனது கட்சியைச் சார்ந்தவர்கள் ஆர்.டி.ஓ.-வுக்கு, "உங்களுக்கு உதவி செய்யக்கூடிய வகையிலே நாங்கள் ஒத்து ழைக்கிருேம், நாங்கள் என்னென்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள்" என்று கேட்டார்கள். எங்களுக்கு ராஜ்ய சர்க்கார் அனுப்பிய கடிதத்தை நம்பி, ஜில்லாவிலே உள்ள கட்சி ஊழியர்களுக்கு நாங்களும் சுற்றறிக்கை அனுப்பினேம். அப்படி நம்பிப் போனவர்களுக்கு என்ன கிடைத்தது?

**The Government of Madras have issued Communication direct to the political parties.**

அங்கே போய்க் கேட்டால், சென்னே அரசாங்கம் அறிவித்துள்ள படி, கட்சித் தலேவர்களேக் கேட்டுக் கொள்ளுங்கள், இங்கு கேட்க வேண்டியதில்லே என்ற அளவிலே பதில் வந்திருக்கிறது. இப்படி இருந்தால் எப்படி ஒத்துழைப்புக் கிடைக்கும்? எப்படி சரியான முறையிலே எல்லாக் காரியங்களும் நடைபெற முடியும்? இது போல பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டிருக்கிறது. இது ஜனநாயகத் திற்குப் புறம்பானது என்று சொன்னுல், சர்வ கட்சிகளின் ஒத்துழைப்பையும், யோசனேயையும் கேட்டுத்தான் காரியங்கள் செய்யப்படுகிறது என்று எப்படிச் சொல்ல முடியும்?

கடைசியாக, ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். முதலாளி களுக்குப் பரவலாக எல்லா வசதிகளும் செய்யப்படுகிறது. அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணத்திற்கு வரும்போது அதிகாரி களேத் தங்களுடன் தங்கள் வேலேகளுக்காக அழைத்துக்கொண்டு போதல். அதெல்லாவற்றையும் விட, தேர்தல் காலத்தில் பொறுப் பற்ற முறையில் இதைச் செய்கிருேம், அதைச் செய்கிருேம் என்று சொல்லி ஆங்காங்கே, அஸ்திவாரக் கல் நாட்டி தேர்தலுக்கான நம்பிக்கையைக் கொடுத்துவிட்டு, பின்னுல் சும்மா இருந்து விடுதல். இதையெல்லாம் நான் பொறுப்பற்ற முறையில் பேசவில்லேயென்று நினேக்கிறேன். தேர்தல் காலங்களில் நடக்கக்கூடியவையைத் தான் எடுத்துச் சொல்கிறேன். இது ஜனநாயகத்திற்கு உகந்த தல்ல. இதையெல்லாம் நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

[16th March 1961

SRI C. N. ANNADURAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இன்றைய விவாதத்தின் இடையில் ஓரளவுக்குக் கருத்து மோதல்கள் ஏற்பட்டு, காரசாரமாகப் பேச்சு நடைபெற்றதால் நான் ஒரு பெரிய ஏமாற்றத்திற்கு ஆளானேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் தம்முடைய கோபதாபங்களையெல்லாம் விட்டுவிட்டதாக நான்கு நாட்களுக்கு முன்னுலேதான் தெரிவித்தார்கள். அவராலே, அவருடைய சுபாவத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை என்பதை உணர்ந்து நான் உண்மையிலேயே வருத்தப்படுகிறேன். ஆனல் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிற பெரிய பணிக்கு, இப்படிப்பட்ட கோபதாபங்களை உடனடியாகக் கொள்கிற சுபாவம் அவருக்குக் குந்தகமாக இருக்கும் என்ற முறையிலேதான் மறுபடியும் இதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மான்யங்களைப் பற்றிப் பேசுகின்ற நேரத்தில், உள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்கின்ற நேரத்தில், "அரசியல் சட்ட திட்டங்களை ஏற்றுக்கொண்டு, உள்ளே வந்திருக்கிற நீங்கள் அதன்படி நடக்க இஷ்டமில்லையானல் வெளியே போய்விடுங்கள்" என்று பேசுவது, மண்டிக் கடையிலே உள்ள குமாஸ்தாவைப் பிடிக்காத காரணத்தால், மண்டிக் கடை முதலாளி, "நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டு இருந்தால் இங்கே இரு, இல்லாவிட்டால் கடையைவிட்டு கீழே இறங்கி விடு", என்று கூறுகிற பாவனையில் இருக்கிறது இது. அதே பாவனையில் கீழே இறங்கிப் போகும் குமாஸ்தா சும்மா இருக்க மாட்டான். நடுவீதியிலே உள்ள மண்ணை எடுத்து வீசி, "எத்தனை நாளைக்கு இந்த வாழ்வு?" என்று கேட்டுவிட்டுப் போவான். அப்படிப்பட்ட வகையிலே நம்முடைய அமைச்சர்கள், அதிலும் நிதியமைச்சர் அவர்கள் அந்த வகையிலே நடந்து கொள்ள வேண்டாமென்று நான் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

சில பேர் உள்ளே இருப்பதால் பெருமை அடைகிருர்கள் ; சில பேர் வெளியே இருப்பதால் பெருமை அடைகிருர்கள். சில பேர் உள்ளே வந்ததாலே சில கட்டுதிட்டங்களுக்கு அடங்கியிருக்கிருர்கள். இவைகள் அனைத்தும் நிதி அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். தெரிந்தாலும், அவர்கள் திடீரென்று ஆத்திரப்படத்தக்க வகையிலே அவர்களுக்கு ஒரு எண்ணம் இருப்பதுபற்றி நான் வருத்தப்படுகிறேன். நண்பர் அன்பழகன் பேசும்போது, "இந்த அமைச்சர்கள் கவர்னர் வீட்டிலேதான் வேலை செய்ய தகுதியுள்ளவர்கள்" என்றதும் ஆத்திரம் வந்தது. அதிலிருந்து கவர்னர் பதவி, கவர்னரிடத்திலே பணியாற்றுவதை எவ்வளவு தாழ்வாகக் கருதுகிருர்கள் என்பதை அறிந்து நான் பெருமைப்பட்டேன். ஆகவே, இதிலே அவர்கள் ஆத்திரப்பட்டு சில வார்த்தைகள் கடுமையாகப் பேசப்பட்டதால், உண்மையிலேயே ஜனநாயகம் ஸ்தம்பித்துவிட்டதாக யாரும் கருதுவதற்கில்லை. திராவிட முன்னேற்றக் கழகம் தவருன பிரசாரத்திலே ஈடுபட்டுள்ளதாக இழித்துப் பேசினுர்கள் ; தரக் குறைவாகப் பேசினுர்கள். அடிதடிகளும் நடைபெற்றதாக சேலம் வட்டாரத்து உறுப்பினர் ஒருவர்

16th March 1961] [Sri C. N. Annadurai]

இங்கே குறிப்பிட்டார்கள். நான் அறிந்திருக்கிற வகையில், சேலத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் பேரில் போடப்பட்ட எல்லா வழக்குகளிலும் சமீபத்தில் போன வாரத் தில் கூட வெளிவந்த கோர்ட்டு நடவடிக்கைகளில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பேரில் அம்மாபேட்டையில் போடப் பட்ட வழக்குகளில்—அவர்கள் குற்றவாளிகள் அல்ல என்று நிரூபிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள். சேலத்தில் விக்டோரியா மார்கெட் மைதானத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தாறுமாறாகப் பேசினார்கள் என்று போலீஸ் தொடுத்த வழக்குகளில் இரண்டு தரப்பினர்களிடமும் குற்றம் இருப்பதாகக் கோர்ட்டில் நிரூபிக்கப்பட்டிருக்கிறதே தவிர, சேலம் தொகுதி உறுப்பினர் சொன்னதுபோல அல்ல. திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அடிக்கிறார்கள், திட்டுகிறார்கள் என்று அவர்கள் பேசி யிருப்பது, உண்மையிலேயே கோர்ட்டு நடவடிக்கைகளை அவர்கள் கவனிக்காமல் பேசுகிறார்களா அல்லது யாரும் எடுத்துக் குறிப்பிட மாட்டார்கள் என்று பேசுகிறார்களா என்று எனக்குப் புரியவில்லை. ஆகையினால், திராவிட முன்னேற்றக் கழகத்தினரைப் பற்றிப் பேசும்போது, அவர்கள் தாறுமாறாக நடக்கிறார்கள், பேசுகிறார் கள் என்று குற்றம் சாட்டியது மட்டுமல்ல. 'இவர்களுக்கெல்லாம் அமைச்சர்கள் வெளியிலே சுற்றுப் பிரயாணம் செய்வதிலே பயம் ஏற்பட்டுவிட்டது, ஆகையினால் அமைச்சர்கள் வரவேண்டாம் என்கிறார்கள்' என்று ஒரு உறுப்பினர் இங்கு குறிப்பிட்டார்கள். உண்மையிலேயே எங்களுக்கு அப்படி ஒரு பயம் இருக்கிறது என்று வாதத்திற்காக வைத்துக் கொள்ளுங்கள். எங்களுக்கு பயம் இருக்கிறது என்று வாதத்திற்காக வைத்துக் கொள்வீர்களே யானால், காங்கிரஸ் கட்சி வளர்வதற்கு மந்திரிகளுடைய சுற்றுப் பிரயாணம் பயன்படுகிறது என்ற ஆசை உங்களுக்கு இருக்கிறது. அந்த ஆசை உண்மையாக இருக்குமானால், இந்த பயம் உண்மை என்று ஏற்றுக் கொள்ளலாம். இந்த பயம் உண்மை என்று வாதித்தால், அந்த ஆசையும் இருக்கிறது என்பதை நீங்கள் மறுப்பதற்கு இல்லை. ஆகையினால் தான் அமைச்சர் களுடைய சுற்றுப் பிரயாணத்தைப் பற்றி எடுத்துச் சொல்லுகிற நேரத்தில், அவர்கள் தங்களுடைய அதிகார வரம்பிற்கு உட்பட்டு நடத்துகிற காரியங்களையும், கட்சி வரம்புக்கு உட்பட்டு நடத்து கிற காரியங்களையும், இரண்டையும் அறுதியிட்டுக் காட்டி, பாகு பாடு படுத்தத்தக்க அளவுக்கு அமைச்சர்களாலும் முடியாது, பொதுமக்களாலும் முடியாது. அமைச்சர்கள் நாடக மேடையில் உள்ள நடிகர்கள் அல்ல. வெளியில் இருந்து பேசுகிற நேரத்தில் அண்ணன், தம்பி, மாமன், மச்சான், காதலன் காதலியாகப் பேசி விட்டு, உள்ளே போனவுடன் அவர்களுக்கு இருக்கிற இயற்கை பெயரில் பேசிக் கொண்டிருப்பது போல, மந்திரிகள் காலை 6 மணி யிலிருந்து 8 மணி வரையில் மந்திரி அலுவல்களை பார்ப்பார்கள், 8 மணியிலிருந்து 10 மணி வரையில் அவர்கள் கட்சி அலுவல்களைப் பார்ப்பார்கள் என்று ஒரு கோடிட்டுக் காட்டுவதற்கு முடியாத

நிலை இருப்பதினால்தான், அமைச்சர்கள் தங்களுடைய சுற்றுப் பிரயாண காலத்தில் கட்சிப் பிரசாரத்தில் ஈடுபடுகிறார்கள் என்பதைப்பற்றி இங்கே குற்றம் குறையாக எடுத்துக்காட்டப் பட்டது. 'ஏதோ பயப்பட்டுக்கொண்டு செய்கிறார்கள்' என்று நம்முடைய உறுப்பினர்கள் சொல்லியிருப்பது குறித்து, 'அமைச்சர்கள் பேசினால் காங்கிரஸ் கட்சி வளரும், நீங்களெல்லாம் பேசினால் காங்கிரஸ் கட்சி வளராது' என்று நீங்களே உங்களைத் தாழ்த்திக் கொள்கிறீர்களே என்றுகூட வருத்தப்படுகிறேன்.

நான் இன்னொரு விஷயத்தைப் பற்றி சற்று விரிவாக இங்கே பேச ஆசைப்படுகிறேன். நமது அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி முன்னால் குறிப்பிட்டார்கள். தேர்தலுக்கான செலவினங்களுக்கு அமைச்சர்கள் அதில் ஈடுபட்டுப் பணத்தை வசூலித்தால் அது குறை அல்ல, அது குற்றம் அல்ல என்று அவர்கள் சொன்னார்கள். அவர்கள் சிறந்த கிரிமினல் லாயராக இருந்தவர்கள். குற்றம் செய்யவில்லை என்று சொல்லுவதைவிட, செய்ததாகச் சொல்லி, அது குற்றம் அல்ல என்று வாதாடுவது சாமர்த்தியத்தின் பால் பட்டது. அந்த வகையில் சில பேர்கள் தாங்கள் வசூல் செய்யவில்லை என்று நடந்ததை மறுத்திருப்பார்கள். 'ஆமாம், அப்படித்தான் நடந்தது. அது எப்படி குற்றம் ஆகும்? நாங்கள் கட்சிக்காரர்கள் அல்லவா? கட்சித் தலைவர்கள் அல்லவா? தேர்தல் என்றால் செலவு இல்லையா, செலவுக்குப் பணம் வசூலிக்க வேண்டாமா? அந்த வசூல் காரியங்களில் மந்திரிகள் ஈடுபட்டால் என்ன குற்றம்?' என்று அமைச்சர் அவர்கள் கேட்டார்கள். அதில் என்ன குற்றம் இருக்கிறது என்று கேட்டால், மூன்று வகையான குற்றங்கள் இருக்கின்றன.

முதலாவதாக, மந்திரிகள் என்றால் பொதுமக்களுடைய மந்திரிகளே தவிர, காங்கிரஸ் கட்சிக்கு மந்திரிகள் அல்ல. அவர்களுக்குத் தரப்படுகிற சம்பளங்கள், கொடுக்கப்படுகிற அந்தஸ்துகள், அவர்கள் பெற்றிருக்கிற அதிகாரங்கள் மொத்தமுமே எல்லா மக்களுக்கும் சேர்த்துத் தரப்பட்டதே தவிர, காங்கிரஸ் கட்சியினுடைய வளர்ச்சிக்காகத் தரப்பட்டது அல்ல. ஆகையினால், அவர்கள் மந்திரி பொறுப்பில் இருக்கிற வரையில், எல்லாக் கட்சியினருக்கும் உட்பட்டவர்கள் அல்லது மேற்பட்டவர்கள் என்று கருதலாமே தவிர, கட்சிப் பிரசாரம் செய்வதற்கு, கட்சித் தேர்தலுக்குப் பணம் திரட்டுவதற்குப் போவது என்பது அமைச்சர்கள் தங்களுடைய தரத்தை குறைத்துக் கொள்வதாகும். அது என்னுடைய முதல் காரணம். ஆகவே அமைச்சர்கள் அதிலே ஈடுபடக்கூடாது என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இரண்டாவது காரணம், "நாங்கள் போய் கேட்காவிட்டால் பணம் கிடைக்குமா?" என்று நமது அமைச்சர் அவர்கள் வாதாடுவதைப் போல இங்கே பேசுகிறார்கள். ஒரு கட்சிக்குப் பொது மக்கள் எதனால் ஆதரவு தருகிறார்கள்? தேர்தல் நிதிக்கு ஏன் பணம் தருகிறார்கள்? 'அந்தக் கட்சி நமது அபிலாஷைகளை

நிறைவேற்றுகிற கட்சி, அதன் கொள்கைகள் நம்முடைய கொள்கைகள், அந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தால் தான் நாம் வாழ முடியும்' என்ற நம்பிக்கையின் பேரில் பொதுமக்கள் தாங்கள் விரும்புகிற கட்சிக்குப் பணத்தை தருவார்கள். அது உண்மையாக இருக்குமானால் ஒவ்வொரு கட்சியும் தேர்தலுக்கான அறிக்கையில் இதை வெளியிடலாம். 'எங்களுக்குத் தேர்தலுக்கு செலவு இருக்கிறது, பணம் கொடுங்கள்' என்று வசூலித்துக் கொள்ளுவது மிக நாகரிக முறையாகும். கனம் நிதி அமைச்சர் அவர்கள் என்னைக் கேட்க பிரியப்படலாம்—'அப்படியா நீங்கள் செய்கிறீர்கள்? நீங்கள் ஊர் ஊராகப் போய் பணம் வசூல் செய்யவில்லையா?' என்று கேட்கக்கூடும். அவர்கள் அப்படி என்னைக் கேட்பது என்னுடைய வாதத்தை வலுப்படுத்துவதாகும். அறிக்கை மூலம் பணம் கிடைக்காது என்று தெரிந்து, அமைச்சர்கள் ஊர் ஊராகப் போய்த் தேர்தலுக்குப் பணம் திரட்டுகிறார்கள் என்றால், 'மந்திரிகள் கேட்டால் பணம் அதிகமாக கொடுப்பார்கள்' என்ற என்னுடைய வாதத்தை அவர்கள் மறைமுகமாக ஏற்றுக் கொள்கிறார்கள் ஒப்புக்கொள்கிறார்கள் என்பதுதான் பொருள். மந்திரிப் பதவியின் செல்வாக்கை கட்சிக்காகப் பணம் திரட்டுவதற்குப் பயன்படுத்தக்கூடாது. மந்திரி என்ற காரணத்தினால் சில செல்வாக்கு ஏற்படுகிறது. சிலருக்குச் செல்வாக்கு இருப்பதினால் மந்திரிகள் ஆகிறார்கள். சிலர் மந்திரிகள் ஆனதினால் செல்வாக்குப் பெறுகிறார்கள். எந்த விதத்தில் செல்வாக்கு வந்தாலும், அந்தச் செல்வாக்கை நாட்டு மக்களுக்குப் பயன்படுத்த வேண்டுமே தவிர, அந்தச் செல்வாக்கை வைத்து கட்சித் தேர்தல் நிதிக்குப் பணம் திரட்டுவது மிகமிகத் தரக்குறைவான காரியம். டெல்லியிலுள்ள அமைச்சர் அவர்கள்—திருமதி தாரகேசுவரி சின்ஹா என்று கருதுகிறேன்—தன்னுடை செல்வாக்கைப் பயன்படுத்தி வடநாட்டில் பல நகரங்களுக்குச் சென்று சிறு சேமிப்புத் திட்டத்தின் கீழ் லட்சக்கணக்கான பணத்தை அங்காடிக்குச் சேர்த்தார்கள் என்று பத்திரிகையிலே பார்த்தேன். நம்முடைய மந்திரிகளும் ஒவ்வொரு அங்காடிக்கும் வரட்டும், வீட்டுக்கு வீடு ஏறி இறங்கட்டும், மாளிகைகளை பார்க்கட்டும், மண்டிக்கடைக்குப் போகட்டும்—பொதுமக்களுக்கு தேவையான பணத்தை திரட்டுவதற்கு அந்த வகையில் தங்கள் செல்வாக்கை பயன்படுத்துவார்களேயானால் அவர்களை உச்சி மேல் வைத்து கொண்டாடும் ஜனநாயக உலகம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதை விட்டுவிட்டு, மந்திரிகள் என்ற காரணத்தினால் ஏற்படக்கூடிய செல்வாக்கை வைத்துக்கொண்டு கட்சி தேர்தல் நிதிக்கு பணம் திரட்டுகிறது என்பது மிகமிக தரக்குறைவான காரியம் என்பதை நான் மறுபடியும், மறுபடியும் குறிப்பிட்டு சொல்ல விரும்புகிறேன். ஆகையினால், தேர்தல் நிதி திரட்டுவது என்ற காரியத்திலே இனியாவது நமது அமைச்சர்கள் ஈடுபடாமல் இருப்பார்களேயானால்தான், அவர்களைப் பற்றி பொதுமக்கள் கொண்டிருக்கிற சந்தேக உணர்ச்சி குறைக்கப்படுமே தவிர, 'இல்லை, அப்படித்

தான் செய்வோம்' என்று சொன்னால்,—உண்மையிலேயே அமைச்சர் அவர்கள் எங்களைப் பார்த்துச் சொன்னதுபோல்,—'அப்படியானால் வெளியிலே போங்கள்' என்று சொன்னதுபோல்—சொல்லத் தக்க அரசியல் பொறுப்பற்ற தன்மையும் எனக்கு இல்லை, அப்படிப்பட்ட அதிகாரத்திலும் நான் இல்லை. ஆகையினால் நான் அப்படிச் சொல்லமாட்டேன்—பொதுமக்கள் பார்த்து 'நீங்கள் வெளியே போங்கள்' என்று சொல்லக்கூடிய காலம் வெகு விரைவிலே வரும் என்று நிச்சயமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொன்றும் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வாங்குகிற பணம், காங்கிரஸ் கட்சி தேர்தல் நிதி யார்யாரிடமிருந்து திரட்டப்படுகிறது என்பதற்கு, பம்பாய் ஹைகோர்ட்டு, கல்கத்தா ஹைகோர்ட்டு ஆகிய நீதிமன்றங்களில் தரப்பட்ட தீர்ப்புகளை படிக்கிற நேரத்தில், உண்மையிலே அரசியல் நாகரிக உணர்ச்சி படைத்த யார்தான் இஷ்டப்படுவார்கள்? டாடா கம்பெனி—தனிப்பட்ட முதலாளிகள்—'எங்கு தொழிற்சாலை நிரந்தரமாக இருக்கவேண்டுமானால் இந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தால்தான் முடியும் என்று கருதி, காங்கிரஸ் கட்சி தேர்தல் நிதிக்கு பணம் கொடுக்கிறோம்' என்று டைரக்டர்கள் சார்பிலே பம்பாய் ஹைகோர்ட்டில் மனு தாக்கல் செய்திருக்கிறார்களே? காங்கிரஸ் கட்சிக்கு பணம் கொடுக்கிற மக்கள் யார்? காங்கிரஸ் கட்சியை காப்பாற்றவேண்டும் என்று விரும்புகிறவர்கள் யார் என்பது இதிலிருந்து வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. அவர்களை அண்டுவதற்கும், பேசுவதற்கும் மந்திரிகள் போனால்தான் முடியும் என்ற காரணத்தினால் அமைச்சர்கள் போகிறார்களே தவிர, இல்லை என்றால் காங்கிரஸ் கட்சிக்கு தேர்தல் நிதி திரட்ட தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரால் முடியாதா? தமிழ் நாடு காங்கிரஸ் தலைவருக்கு உங்களுக்கு இருக்கிற செல்வாக்கு இல்லை என்று சொல்லுகிறீர்களா? கனம் திரு. சுப்பிரமணியம் அவர்கள் கேட்டால் ரூ. 1,000 கொடுப்பவர்கள், திரு. அழகேசன் அவர்கள் கேட்டால் தரமாட்டார்கள் என்று கருதுகிறீர்களா? ஏன் என்னுடைய மாவட்டத்திலுள்ள பெரியவரை அவ்வளவு தரக் குறைவாக, செல்வாக்கற்றவராக நீங்கள் கருதி, அவரை தமிழ் நாடு காங்கிரஸ் தலைவராக வைத்துக்கொண்டு, இந்த சாதாரண தேர்தல் நிதி திரட்டும் காரியத்தில்கூட நீங்கள் குறுக்கிடுகிறீர்கள்? மாவட்டத்தில் இருக்கிற காங்கிரஸ் தலைவர்கள் என்ன செய்கிறார்கள்? மாவட்டத்தில் இருக்கிற பழம்பெரும் காங்கிரஸ் தியாகிகள் என்ன செய்கிறார்கள்? உங்கள் 8 பேர்கள் நீங்கலாக தேர்தல் நிதி திரட்டுவதற்கு ஆள் பஞ்சம் ஏற்பட்டுவிட்டதா? காங்கிரஸ் என்றால் நீங்கள் 8 பேர்கள் தானா? நீங்கள் 8 பேர்கள் கேட்டால்தானா காங்கிரஸுக்கு பணம் தருவார்கள்? ஏன் உங்கள் கட்சியை இப்படி இழிவுபடுத்துகிறீர்கள்? உங்களை உயர்த்திக் கொள்ள வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அந்த உயர்ந்த

16th March 1961] [Sri C. N. Annadurai]

எண்ணத்திலே இருந்துதான் நிதி அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் சொன்னார்கள்: 'இஷ்டம் இருந்தால், இரு, இல்லையானால் போ' என்று. அந்த உயர்ந்த பண்பு வளரட்டும். ஆனால், தேர்தலுக்கு நிதி திரட்டுகிற அளவுக்குக்கூட காங்கிரஸ் தலைவர்களுக்கு செல்வாக்கு இல்லை என்றா கருதவேண்டும்? ஆகிய காரணங்களினால், இந்தத் தேர்தல் நிதி திரட்டுகிற காரியத்தில் அமைச்சர்கள் ஈடுபடவேண்டாம் என்று நான் பணிவோடு கேட்டுக் கொள்ளுகிறேன். மற்றும் ஒன்று. தேர்தல் வருவதற்கு 6 திங்களுக்கு முன்னால், 3 திங்களுக்கு முன்னாலாவது அவர்கள் பதவியை விட்டு விலகவேண்டுமென்ற கருத்து என்னுடைய கழகத்தினாலே அதிகாரபூர்வமாக எடுத்துச் சொல்லப்படவில்லை என்றாலும், நாட்டில் அப்படிப்பட்ட ஒரு கருத்து மிக வேகமாகப் பரவிக் கொண்டு வருகிறது. இது எந்த ஜனநாயக நாட்டிலும் நடைபெறுவதில்லை என்ற வாதத்தை நீங்கள் தருவீர்கள் என்றாலும், வளர்ச்சி அடையாத ஜனநாயக நாடுகளிலே இருக்கும் ஜனநாயகத்துக்கும், இந்த நாட்டு ஜனநாயகத்திற்கும் வித்தியாசம் இருக்கிறது என்ற காரணத்தினாலே, ஜனநாயகத்தின் தூய்மையைக் காப்பாற்ற, உங்களுடைய நற்பெயரைக் காப்பாற்றிக்கொள்ள நீங்கள் தேர்தலுக்கு 6 திங்களுக்கு முன்னால் பதவியிலிருந்து விலகுவதுதான், நாட்டு மக்களுக்கு நீங்கள் எடுத்துக்காட்டக்கூடிய மிகச்சிறந்த ஜனநாயகப் பண்பு என்பதை நான் உங்களுக்கு எடுத்துச் சொல்லிக்கொள்கிறேன். கவர்னரைப் பற்றியும், மற்றவர்களைப் பற்றியும் பேசியதிலே நாங்கள் எதோ வெளியிலே ஒன்று பேசுகிறோம், உள்ளே ஒன்று பேசுகிறோம் என்று மதிப்பிற்குரிய காங்கிரஸ் கொரடா எடுத்துச் சொன்னார். கொரடா என்று சொன்னாலே, எது அகப்படுகிறதோ, அதைப் பிடித்து இழுப்பது என்பது பொருள். எதோ கிடைத்ததை வைத்துக்கொண்டு அவர் இழுத்திருக்கிறார். அவருக்கு தக்க சமயத்தில், தக்க இடத்தில் நான் தனியாக பதில் சொல்லிக்கொள்கிறேன். அவருக்குச் சொல்லுவேன், இந்தத்தடவை கொரடா, இல்லாததைப் பிடித்து இழுத்து, இழுத்து, கொரடாவும் கையுமாகச் சண்டை போடுவது என்ற முறையில், 9 லட்சம் கவர்னருக்காக ஆகின்ற செலவா என்று குறிப்பிட்டார்கள். ஆனால் அவசரத்திலே நாலடியார் என்ற தமிழ்ப்புலவர் எதோ சொன்னதாகச் சொன்னார். நாலடியார் என்ற தமிழ்ப் புலவர் இல்லை. நாலடியார் என்ற புத்தகத்துக்குப் பெயர் இருக்கிறது. ஆகவே, அவருடைய ஆர்வத்தைப் பாராட்டி, அவசரத்திற்கு அனுதாபம் தெரிவித்துக்கொண்டு, நான் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*SRI V. K. RAMASWAMY MUDALIYAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தின்மீது கொண்டுவரப்பட்ட வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர்கள் எங்கு பார்த்தாலும் சுற்றுப் பிரயாணம் செய்வதைப் பற்றி சில காலமாகவே புகார்கள் கிளம்பி

யிருக்கின்றன. என்னைப் பொறுத்தவரையில் அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யக்கூடாது என்று சொல்வதற்கு நான் தயாராய் இல்லை. முக்கியமான பிராந்தியங்களில் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டும், மக்களுடைய குறைகளைக் கேட்டு வேண்டியதைச் செய்யவேண்டும் என்று கருதுபவர்களில் நானும் ஒருவன். இந்த சுற்றுப் பிராயணங்களின் காரணமாக தங்கள் கட்சியை வளர்க்கிறார்கள் என்ற நோக்கம் சமீபத்திலே ஏற்பட்டிருப்பதன் காரணமாகத்தான், எங்கு பார்த்தாலும் பரபரப்பும், அதிருப்தியும் ஏற்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி நான் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. அமைச்சர்கள் எங்குவேண்டுமானாலும் போகலாம், ஆனால் அவ்விடத்திலுள்ள உத்தியோகஸ்தர்களை வைத்துக்கொண்டு அநேக கூட்டங்களில் பேசுவது, மண்டல காங்கிரஸ்காரர்கள் மத்தியில் எல்லோரையும் வைத்துக்கொண்டு பேசுவது, அதற்குப் பிறகு நடக்கும் நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் பார்த்தால், ஆங்கிலத்தில் பிளாக்மெயில் என்று சொல்லுவார்களே, மிரட்டல் அதைப்போல அந்தக் காங்கிரஸ்காரர்கள் பின்னர் அந்த உத்தியோகஸ்தர்களை மிரட்டியோ, அல்லது வேறு வகையிலோ, தங்கள் நலனுக்காக எப்படி உபயோகித்துக்கொண்டு வருகிறார்கள் என்பதைப்பற்றி எல்லாம் யோசிக்கவேண்டும். கட்சிக்காகப் பிரசாரம் செய்வதைப்பற்றி ஒருவரும் ஆட்சேபணை செய்யமுடியாது. கிராம மக்களுடைய நலனுக்காக சுற்றுப் பிரயாணம் செய்யட்டும். ஆனால் அப்படிப் போகும் காலத்தில், இன்ஸ்பெக்ஷன் என்று வைத்துக்கொண்டு, உத்தியோகஸ்தர்களை வைத்துப் பார்க்கட்டும். அதற்குப் பிறகு அவர்களை அனுப்பிவிட வேண்டும். பின்பு அவர்களுடன் கான்பெரன்ஸில் பேசவேண்டுமானால், சர்க்யூட் ஹவுஸிலோ அல்லது முசாபரி பங்களாவிலேயோ பேசுவதில் தவறு ஒன்றும் கிடையாது. ஆனால் கூட்டங்களில் அதிகாரிகளை வைத்துக்கொண்டு, போலீஸ் பந்தோபஸ்தோடு மற்ற கட்சிகளைத் தாக்குவதன் காரணமாகத்தான் இந்த ஆட்சேபணை எல்லாம் கிளம்பியிருக்கிறது.

(Deputy Speaker in the Chair.)

அடிக்கடி மந்திரிகள் வெளியில் போவதன் காரணமாக நிர்வாகம் சரியாக நடக்கிறதா என்பதையும் பார்க்கவேண்டும். எங்கு பார்த்தாலும் ஊழல்கள் நடக்கின்றன. லஞ்ச ஊழல்கள் இருக்கின்றன. அரசாங்கத்துக்கு அனுப்பப்படும் பேப்பர்கள் எல்லாம் தாமதம் ஏற்படுகிறது. மக்கள் ஆயிரக்கணக்கான மனுக்களை சமர்ப்பிக்கிறார்கள். ஒரு வருஷம், இரண்டு வருஷம், மூன்று வருஷம் என்று பேப்பர்கள் தாமதிக்கப்பட்டு, எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை, மக்களுக்கு ஒருவிதமான நன்மையும் ஏற்படுவதில்லை என்பதை திட்டவட்டமாகச் சொல்ல விரும்புகிறேன். இதை எல்லாம் தவிர்ப்பதற்கு என்ன செய்கிறார்

16th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

கள். இதைப்பற்றி ஆளும் கட்சியில் உள்ள அங்கத்தினர்கள்கூட சொல்லியிருக்கிறார்கள். ஆனால் ஒன்றும் நடைபெறவில்லை. சட்ட சபை நடக்கும்பொழுது அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்வது கண்டிக்கத்தக்கது. கனம் கல்யாணசுந்தரம் முதல் அமைச்சர் இந்த சமயத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வதைப் பற்றிச் சொன்னார்கள். மற்ற அமைச்சர்களும்கூட சட்டசபை நடக்கும்பொழுதுதான், புரோகிராம் போட்டுக்கொண்டு சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருக்கிறார்கள். இதைப்பற்றி நாம் வருத்தப்படவேண்டியதாய் இருக்கிறோம். தவிர, நமது சட்ட சபையானது வருஷத்திலே 60 அல்லது 70 நாட்கள்தான் கூடு கின்றது. 365 நாட்களிலே இவ்வளவு நாட்களுக்குத்தான் சட்ட சபை கூடுகிறது. இந்த 60 அல்லது 70 நாட்களிலும் ஒரே தொடர்ச்சியாக சட்டசபை நடக்கவில்லை. இப்படியிருக்கும் பொழுது, அவர்களுக்கு இந்த சமயத்தில் என்ன அவசரமான காரி யம் வந்து விடுகிறது? ஆகவே சட்டசபை நடக்கும்பொழுது இங்கேயே இருந்துகொண்டு, மக்களுக்கு ஏதாவது செய்யமுடியுமா என்பதைப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தேர்தலுக்கு சில மாதங்களுக்கு முன்பே ஆளும் கட்சியினர் பதவியை விட்டு விலகவேண்டுமென்று எங்கே பார்த்தாலும் பேச்சு நடந்துகொண்டுவருகிறது. ஜனநாயகத்தில் எந்த நாட் டிலும் இந்தமாதிரி வழக்கம் இல்லை என்று சொல்லலாம். உண்மை. ஆனால் இதைச் சொல்வதற்கு முக்கியமான காரணம் என்ன வென்றால், தேர்தல் சமயத்தில் அதிகாரிகளை வைத்துக்கொண்டு நீங்கள் கட்சிப் பிரசாரத்திற்காக சுற்றுப்பிரயாணம் செய்வதன் காரணமாக, மக்கள் பயமுறுத்தப்படுகிறார்கள். 1957-ம் வருஷத்தில் நடந்த தேர்தலைப் பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். என்னு டைய தொகுதியிலே அநேக இடங்களுக்கு நமது உள்துறை இலாகா அமைச்சர், தேர்தலுக்கு மூன்று தினங்களுக்கு முன்பு கொடியைப் போட்டுக்கொண்டு போயிருக்கிறார். மின்சார விளக்குப் போடுவது, பள்ளிக்கூடங்களுக்கு அஸ்திவாரக்கல் நடுவது, மருத்துவசாலைகளைத் திறப்பது போன்ற பல விழாக்களில் பங்கு எடுத்துக்கொண்டிருக்கிறார். எல்லாம் ரிகார்டில் இருக் கிறது. இம்மாதிரி செய்வதன் காரணமாக அவர்களுக்கு ஒரு தனிப்பட்ட செல்வாக்கு ஏற்படுகிறது. அம்மாதிரி செல்வாக்கு ஏற்படுவதன் காரணமாக அவர்களுக்கு கிடைக்கும் ஓட்டுகள் ஏறு கின்றன. எதிர்க்கட்சிகளுக்கு அதனால் பாதகம் ஏற்படுகிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். இங்கிலாந்து தேசத்தில் என்ன நடக்கிறது என்பதை நாம் பார்க்கிறோம், படித்திருக் கிறோம். பிரதமராக இருந்த லார்டு அட்லி அவர்கள் தேர்தல் காலத்தில் தன்னுடைய சொந்தக்காரில், மனைவியைக் கொண்டு காரை ஓட்டச்சொல்லி, அதிகாரத்தை உபயோகப்படுத்தாமல், எவ்வளவு நாகரிகமாக நடந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை நான் இங்கே எடுத்துக்காட்ட விரும்புகிறேன். தவிர, காந்திஜி

அவர்கள் **"Conception of Indian Ministers and Governors of Independent India",** என்பதைப்பற்றி கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார்கள் :

"Their personal life should be a model of simplicity. They should perform body labour for at least one hour daily either in the form of spinning or scavenging, growing of food or of vegetables to help the country to make good the food shortage."

"The Ministers should be free from all vices and addictions. They should set an example in plain living and high thinking. They would need no bodyguards. People themselves would provide all the security they might require instead of their having to invoke security measures against people. May be, mine will prove to be a cry in the wilderness, but I cannot remain silent as I do not want to go down as an unprotesting witness of what is taking place around me in the country today."

இப்பொழுது காந்திஜி அவர்கள் உயிரோடு இருந்தால், அவரை வேறு ஒருவரும் கொன்றிருக்க வேண்டியதில்லை. தானாகவே தற்கொலை செய்து கொண்டிருப்பார்.

ஆகவே, இவற்றை எல்லாம் கண்ணும் கருத்துமாகக் கவனித்து, எதிர்க்கட்சியினர் சொல்லுவதையும் மனத்தில் கொண்டு. நிர்வாகத்தை நல்ல முறையில் நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் துணைத்
12-30 p.m. தலைவர் அவர்களே, முதன் முதலிலே, கோபம் வந்த முறையில் நான் நடந்து கொண்டதற்கு வருத்தத்தைத் தெரிவிக்கிறேன். கோபம் வரக்கூடிய காரணம் இருந்தாலும்கூட, கோபம் வராமல் இருக்க வேண்டும் என்பதை உணருகிறேன். (குறுக்கீடு) இயற்கை குணம் அவ்வளவு சுலபமாக விட்டு விடாது. (குறுக்கீடு) அதுதான் சொன்னேன், கோபம் வரக் காரணம் இருந்தாலும், கோபம் வராமல் இருப்பதுதான் சிறந்தது; காரணம் இல்லாமல் இருக்கும் போது யாரும் கோபிக்க மாட்டார்கள். ஆனால் காரணம் இருந்தாலும்கூட, அது வரக்கூடாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அதை என்னுடைய குறையாக உணர்ந்திருக்கிறேன் என்பதை மறுபடியும் தெரிவிக்க விரும்புகிறேன். அந்தக் குறையை அங்கத்தினர்களும் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன், (குறுக்கீடு) இருக்கிற வரைக்கும் பொறுத்துத் தான் ஆகவேண்டும். வேண்டாம் என்றால் போகிறேன்.

மந்திரிகள் எல்லோரும் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று பல எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், பேசினார்கள். எங்கள் மதிப்பை உயர்த்த வேண்டும் என்பதற்காகச் சொன்னார்கள் என்று அதில் பல கருத்துக்களை நான் வரவேற்கிறேன். முக்கியமாக, திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர், நிதி வசூல் செய்வதைப்பற்றி மறுபடியும் எடுத்துப் பேசினார்கள். அதைப்

16th March 1961] [Sri C. Subramaniam]

பற்றிப் பேச வேண்டுமென்ற ஆவா உள்ளவன் நான். அது மூடி மறைக்க வேண்டிய காரியம் இல்லை. இன்றைக்கு மந்திரிகள் தேர்தல் நிதி திரட்டுகிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்வது மட்டுமின்றி, அதை மறை முகமாகச் செய்யவில்லை என்றும் சொல்லிக்கொள்ளுகிறேன். அப்படித் திரட்டுவது சரியா இல்லையா என்று ஒரு முடிவு கட்டவேண்டும். தரக்குறைவா, பண்பா என்ற முறையில் இல்லாமல் முதலில் அது சரியா இல்லையா என்று முடிவு எடுக்க வேண்டும். இங்கு மட்டுமல்ல, நம் நாட்டிலே எல்லா இடங் களிலும் நடக்கக்கூடிய இதைக் குறித்து ஒரு முடிவு ஏற்பட வேண்டும் என்றே நான் பல இடங்களில் இந்தப் பிரச்னையை கிளப்புகிறேன். இன்றைக்கு மந்திரிகள் என்று சொல்லும்போது, எல்லோருக்கும் பொதுவாக இருப்பவர்கள் என்று திராவிட முன் னேற்றக் கழகத் தலைவர் சொன்னார்கள். எனக்குத் தெரிந்தவரை மந்திரிகள் என்று சொல்லும்போது, அவர்கள் எல்லோருக்கும் பொதுவாக பணியாற்ற வேண்டுமென்றே பணியாற்றுகிறோம், பணி யாற்ற முயற்சிக்கிறோம்; முயற்சிகளில் தோல்வி அடைந்தால் அது வேறு; அவ்விதம் முயற்சி செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இந்த கட்சி அடிப்படையில் இயங்கும் ஜனநாயக அரசியல் அமைப்பில் மந்திரிகள் இவ்வாறு எல்லோருக்கும் பொதுவாகப் பணியாற்றுகிறவர்கள் என்பது நிர் வாகத் துறையில் சரியானாலும், அவர்களும் கட்சியைச் சேர்ந்தவர் கள் என்பதை மறக்கக்கூடாது. இன்றைக்கு மந்திரிகள் தமிழ் நாட்டுக்கு மந்திரிகள் ஆனாலும், அவர்கள் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதை மறக்கக்கூடாது, மறக்க முடியாது. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்ற காரணத்தினால்தான் இங்கே மந்திரிகளாக இருக்கிறார்கள் என்பதை உணர வேண்டும்.

இன்றைக்கு இருக்கக்கூடிய பிரச்னை, அரசியல் கட்சிகள் தேர்தலுக்கு நிதி திரட்டலாமா வேண்டாமா என்பதுதான். அதை முதலில் முடிவு செய்யவேண்டும். இன்றைக்கு இருக்கும் ஜன நாயக அடிப்படையில், தேர்தல்களுக்கு நிதி அவசியம்; நிதியைத் திரட்ட வேண்டும் என்பதைப்பற்றி யாரும் கருத்து வேறுபாடு கொள்ள முடியாது. காங்கிரஸ்காரர்கள் மந்திரிகளாக இருந்து செய்கிறார்கள் என்பதால் முறைத் தவறு என்று சொல்வது சரி யாகாது. முறை சரியா என்று பார்க்க வேண்டும். தரக் குறைவு என்பது இல்லை. மந்திரிகள் தரக் குறைவாக நடக்கமாட்டார்கள், அவர்கள் செய்வதால் தரக் குறைவு ஏற்படாது. ஆனால், அது முறையானதா என்பதைத்தான் நாம் யோசிக்க வேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் நீங்கள் கேட்டுக் கொடுப் பவர்கள், தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் கேட்டால் கொடுக்கமாட் டார்களா என்ற கருத்தை சொன்னார்கள். கட்டாயம் கொடுப் பார்கள். ஆனால், அந்த கட்சிக்காரர்களே மந்திரிகளாக இருக்கும் போது, மந்திரிகள் செய்தால் அதிகம் வசூல் செய்து விடுவார்கள் என்பது எப்படி சரியாகும்? காங்கிரஸ்காரர்களே மந்திரிகளாக இருக்கும் காரணத்தால், மற்றவர்களுக்கும் நிதி கொடுப்பார்கள்;

[Sri C. Subramaniam] [16th March 1961

அவர்களுக்கும் தெரியும் கட்சித் தலைவரிடம் கொடுத்தாலும் அவர்கள் கட்சி சார்பில் மந்திரிகளிடம் அப்படிக் கொடுத்தவர்களின் பட்டியலை கொடுத்து, யார் யார் கொடுத்தார்கள் என்று காட்டுவார்கள், அவர்களும் பார்ப்பார்கள். அதில் ஒளிவு மறைவாக வைத்துக்கொள்ளலாம் என்றால் வைத்துக்கொள்ளலாம். அப்படி வைத்துக்கொள்ள முடியாது. ஆகவே, காங்கிரஸ் கட்சிக்காரர் யாராக இருந்தாலும், மந்திரி சபை இருக்கின்ற காரணத்தால், யாரும் கொடுப்பார்கள். அது மந்திரிகளானால் என்ன? கட்சித் தலைவர் ஆனால் என்ன? அப்பொழுதும் மந்திரிசபை இருக்கும் காரணத்தினால் கட்சித் தலைவருக்குக் கொடுக்கிறார்கள் என்று வாதாட முடியும். ஆகவே, அரசியல் கட்சி அதிகாரத்தில் இருக்கும்போது, அது எந்தக் கட்சியானாலும், நிதி திரட்டக் கூடாது என்று முறை வகுப்பதானால், அதைப்பற்றி விவாதிக்கலாம். ஆனால் ஒரு கட்சி நிதி திரட்டலாம். அது முறையானது என்றால், மந்திரி பண்ணினால் அது குற்றம் என்று சொல்லுவது ஏன்? என்று புரியவில்லை. மந்திரிகளானால், அவர்கள் நேரிடையாகச் செய்யலாம். மற்றவர்கள் செய்வதானால், இன்னும் அது மோசமாக இருக்கும். மந்திரிகளுக்கு பொறுப்பு இருக்கிறது; நிதி கொடுக்க முடியுமானால், விரும்பினால்தான் கொடுக்கப் போகிறார்கள். எந்தக் கூட்டத்தில் வேண்டுமானாலும், நாங்கள் சொல்லும் முறைகளை உங்கள் ஸி.ஐ.டி. வைத்துப் பார்த்தாலும்கூட எனக்கு ஆட்சேபமில்லை. கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்தப்படுத்தும் முறையில் மந்திரிகள் செய்கிறார்களா என்று பார்த்துக்கொள்ளலாம். எந்த விதமான தவறும் ஏற்படக்கூடாது, தவறில்லாமல் நடத்தக்கூடியவர்கள்தான் செய்யவேண்டும், அவர்கள்தான் இந்த வேலையை ஏற்றுக்கொள்ள வேண்டும். மற்றவர்கள் இதில் தலையிடக்கூடாது என்று கட்டுப்பாடு செய்கிறோம். அது ஒன்று. இரண்டாவதாக, கட்சிக்குப் பணம் கொடுக்கும் யாருக்கும் நிர்வாகத்தில் ஏதாவது சலுகைகள் கொடுக்கப்படுகிறதா என்றால் கிடையாது. அல்லது கொடுக்கமாட்டேன் என்றவருக்கு ஏதாவது பாதகம் ஏற்படுகிறதா என்றால் அதுவும் கிடையாது. அது இன்னொன்று. அதற்கு மாறாக ஏதாவது நடக்கிறதென்றால், அதைக் கட்டாயம் சுட்டிக் காட்டலாம்; குற்றம் இருந்தால் உண்மையை ஒப்புக்கொள்ளத் தயார். அந்த அடிப்படையில் செய்யப்படுகிறது என்று திட்டவட்டமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்குக் கொள்கை அடிப்படையில் செய்யப்படுகிறது, எல்லோருக்கும் திட்டவட்டமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கொடுக்கும் காரணத்தால் யாருக்கும் எந்த வசதியும் கொடுக்கப்படுவதில்லை. கொடுக்காததால் யாருக்கும் எந்த பாதகமும் செய்யவில்லை என்ற உறுதியை இந்த சபையில் சொல்ல விரும்புகிறேன். இதற்கு மாறாக ஏதாவது நிகழ்ச்சி நடந்தால், எங்கள் பேரில் குற்றம் சாட்ட எந்தக் கட்சிக்கும், ஏன் தனிப்பட்டவர்களுக்கும் உரிமை இருக்கிறது என்றும் சொல்ல விரும்புகிறேன்.

16th March 1961] [Sri C. Subramaniam]

இதிலே மந்திரிகள் கட்சியிலிருந்து மாறுபட்டவர்கள் என்று பேசுவது சரியாகாது. யாரையாவது போடுவதற்குப் பதிலாக, பொறுப்பை உணர்ந்த மந்திரிகளை தவறு ஏற்படாத முறையில் செய்ய வேண்டும் என்கிறோம். கண்டவர்களைப் போட்டு, அவர்களிடம் விட்டு அது வேறு விதமாகப் போவது கூடாது. ஆனால் மந்திரிகள் செய்வதே தவறு என்பதை ஒத்துக்கொள்ள முடியவில்லை. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் பேசியதையும் கேட்டேன்; மற்றவர்கள் அதைப்பற்றி விவாதிப்பதையும் அதிகமாகக் கவனித்துக்கொண்டு வருகிறேன். அதோடு என்னுடைய மனதிலேயே ஆழ்ந்து சிந்தனை செய்து, தவறு என்றால் அதிகாரத்தில் உள்ள எந்தக் கட்சியும் நிதி திரட்டக்கூடாது; இல்லை வேறு அடிப்படையில் என்றால், மந்திரிகள் போய் இம்மாதிரி நிதி கொடுக்க வேண்டும் என்பதில் தரக் குறைவு எதுவும் நேர்ந்துவிடாது, தமிழ் நாட்டு மக்களுக்கு எந்தத் தரக் குறைவும் ஏற்படாது என்று, திரு. அண்ணாதுரை அவர்கள் அதைக் குறிப்பிட்டதால் சொல்லுகிறேன் அவர்களுக்கு. நிதி திரட்டுவது முறையில்லை என்றால் அது வேறு விஷயம்; தரக் குறைவு எதுவும் இல்லை என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு விஷயம். "இம்மாதிரி பணம் கொடுக்கக்கூடியவர்கள் யார்?" என்று கேட்கின்றார்கள். இன்றைக்குத் தனிப்பட்டவர்களிடத்தில் போய், அவர்களுடைய கணக்கில் வைக்காமல் பணம் திரட்டுவது என்றால், அப்படிச் செய்துவிட முடியும். ஆனால், கணக்கு இருக்கக்கூடிய முறையில் தனிப்பட்டவர்களானாலும் சரி, பொதுக் கம்பெனிகளானாலும் சரி, அவர்களிடமிருந்து பணம் திரட்ட வேண்டுமென்று ஏற்பாடு இருப்பதற்குக் காரணம், தனிப்பட்டவர்களுக்கு யாரும் கடமைப்பட்டிருக்கக் கூடாது என்பதுதான்.

டாடா உதாரணத்தைச் சொன்னார்கள். புதிய உருக்குத் தொழிற்சாலைகள் முழுவதும் பொதுத் துறையில் ஏற்படவேண்டுமென்ற முறையை அமைத்திருக்கிறோம். இது காங்கிரஸ் கட்சியினுடைய கொள்கை. இன்றைக்கிருக்கும் நிலைமையில் எந்தக் கட்சி உறுதியான மந்திரி சபையை ஏற்படுத்தி நிர்வாகத்தை நல்ல முறையில் நடத்திச் செல்ல முடியும், இன்றைக்கு இருக்கும் நிலையில் மக்களைப் பொருளாதாரத் துறையில் எந்தக் கட்சி உயர்த்த முடியும் என்பதை ஆராய்ந்து அந்தக் கட்சிக்கு மக்கள் பண உதவி செய்ய முன்வருகிறார்கள். ஏதோ மேல் தளத்தில் இருக்கக்கூடியவர்கள் மட்டுமல்ல, கீழ்த்தளத்தில் இருக்கக்கூடியவர்கள்—ஒரு ரூபாய், ஐந்து ரூபாய், பத்து ரூபாய் கொடுக்கக் கூடியவர்கள்—அதிகமானவர்களாக இருக்கிறார்கள் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகமாக இருந்தாலும் சரி, சுதந்திரா கட்சியாக இருந்தாலும் சரி, மற்ற கட்சிகளாக இருந்தாலும் சரி, அவர்கள் என்ன சொல்கிறார்கள்? "எங்களுக்கும் மக்களுடைய

ஆதரவு இருக்கிறது, மக்களுடைய ஆதரவைப் பெற்று, நாங்கள் அதிகாரத்திற்கு வரப்போகிறோம், காங்கிரசைத் தோற்கடிக்கப் போகிறோம்" என்று சொல்கிறார்கள். அப்படிப்பட்ட கட்சித் தலைவர்கள் நிதி வசூல் செய்யும்போது "இவர்கள் பின்னால் வரக் கூடிய மந்திரிகள்" என்று நினைத்து பணம் கொடுக்கிறார்கள் என்று நாங்கள் அவர்களைப்பற்றி சொல்லவேண்டுமா? அவர்களும் நிதி திரட்டுகிறார்கள். மந்திரிகளாக வந்தால் நிதி கொடுத்தவர்களுக்குச் சாதகம் செய்துவிடுவார்கள், கொடுக்காதவர்களுக்குப் பாதகம் செய்து விடுவார்கள் என்று வாதிப்பதா? ஆகவே, நான் தெரிவித்துக்கொள்வது இதுதான். மனிதனுடைய நல்ல தன்மையைக் கொஞ்சம் ஒப்புக்கொள்ள வேண்டும். பொறுப்பில் இருக்கிறவர்கள் முறை தவறிப் போவார்களானால் ஜனநாயக ரீதியில் அவர்களைச் சந்தியில் இழுக்க முடியும் என்ற அடிப்படையில்தான் நிர்வாகம் நடக்குமே தவிர, போட்டிருக்கும் துணியையே நம்பாத முறையில் பணியாற்றினால், அப்பொழுது ஜனநாயகம் என்பதே நிலவ முடியாது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

தேர்தல் நிதி திரட்டக்கூடாது என்று அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டால், பண வசதி படைத்த பல முதலாளிகள், மற்ற தொழில் நடத்தக்கூடியவர்கள், வியாபாரிகள்தான் தேர்தலுக்கு நிற்கலாம், என் போன்றவர்கள், திரு கக்கன் அவர்களைப் போன்றவர்கள் தேர்தலுக்கு நிற்க முடியாது என்ற நிலைதான் ஏற்படும். நடிகர்களாக இருந்து பணம் சம்பாதிப்பவர்கள் வேண்டுமானால் தேர்தலுக்கு நிற்கலாம், சாதாரணமாக இருப்பவர்கள் நிற்க முடியாது என்ற நிலைமை ஏற்படும். ஆகையால் சாதாரணமாக இருக்கக்கூடியவர்களும் மக்களுடைய பிரதிநிதிகளாக வருவதற்கு, அவர்களும் தேர்தலுக்கு நிற்கக்கூடிய நிலைமை ஏற்படுத்த வேண்டுமானால், அதற்கான சூழ்நிலையை ஜனநாயக அடிப்படையில் இயங்குகிற எல்லாக் கட்சிகளும் ஏற்படுத்தித்தான் தீரவேண்டும் என்ற கருத்தை நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

ஜனநாயகம் வலிவுற வேண்டும். சாதாரண நிலையிலுள்ள மக்களாக இருந்தாலும்கூட, அதிக பொருள் வசதி இல்லாத மக்களாக இருந்தாலும்கூட, அவர்களுக்கும் இங்கு வரக்கூடிய உரிமை இருக்கிறது. இன்றைக்கு இருக்கும் அரசியல் அமைப்பின்படி அது நிறைவேற வேண்டுமென்றால், முக்கியமாகக் கட்சிதான் தேர்தல் செலவுப் பொறுப்பையெல்லாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது, அதைத் தவிர வேறு வழி இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**SRI C. N. ANNADURAI:** அமைச்சர்கள் சென்று தேர்தல் நிதி திரட்டுவதற்கும் வேறு தலைவர்கள் திரட்டுவதற்கும் இடையிலே இருக்கும் ஒரே வித்தியாசம்—அமைச்சர்கள் நேரடியாகக் கேட்கிறபோது "இல்லை" என்று சொல்வதற்கும், குறைவாகத் தருவதற்கும் பயம் ஏற்படுகிற அளவுக்குத்தான் ஜனநாயகப் பண்பு நாட்டிலே வளர்ந்திருக்கிறது.

16th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : அமைச்சர்கள் கேட்டும் "கொடுக்க முடியாது" என்று சொல்கிறவர்கள் இருக்கிறார்கள். பயப்படுகிறவர்களானால் "கொடுக்க முடியாது" என்று சொல்லமாட்டார்கள். அத்தகைய பண்பு மக்களிடத்தில் இருக்கிறது. குறைத்துக் கொடுப்பவர்கள் குறைவாகக் கொடுக்கிறார்கள். அதிகமாகக் கொடுப்பவர்கள் அதிகமாகக் கொடுக்கிறார்கள். மந்திரிகள் போய்க் கேட்டால் அள்ளி அள்ளி வாரி விசிவிடுகிறார்கள் என்று நினைப்பது தவறான கருத்தாகும். மந்திரி போனதினாலேயே அதிகமாக நிதி வருகிறது, 'கொடுக்கமாட்டோம்' என்று சொல்லப்பயப்படுகிறார்கள்--என்ற நிலைமையில் இன்றைய மக்கள் இல்லை. ஒரு சமயம் அவர்கள் போய்க் கேட்பார்களானால் அடுத்து வரப்போகிற முதலமைச்சர் என்று பயந்து கொண்டு அவர்களுக்குக் கொடுக்கிறார்களோ என்னவோ, எனக்குத் தெரியாது சுதந்திரா கட்சியை ஆதரிக்கிறவர்கள் இருக்கிறார்கள். காங்கிரசுக்கு நிதி கொடுக்கவில்லை யென்றால் அவர்களுக்கு எந்த விதக் குறைவும் ஏற்படுத்திவிடவில்லை. ஒதுங்கி நிற்கிறவர்கள் ஒதுங்கித்தான் இருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எல்லா அரசியல் கட்சிகளும் தேர்தல் செலவுக்காக நிதி திரட்ட வேண்டும் என்ற நிலைமை ஏற்படும்போது குற்றங்குறை இல்லாமல், குறைகள் வந்து புகுந்து விடாமல் எப்படிப் பாதுகாப்புக்களை ஏற்படுத்திக் கொள்வது என்று சிந்தனை செய்வதுதான் நல்லது. அப்படியில்லாமல் இரகசியமாக, நிதிகளைத் திரட்டிக்கொள்ளுங்கள் என்றால், இப்பொழுது பொறுப்போடு செய்கிற ஒரு முறை இருக்கிறதே அது தவறிப் போய்விடும். இரகசியமான முறையில் யாராவது ஆதரவு கொடுப்பது என்ற நிலைமை ஏற்படுமானால், இப்பொழுது இருக்கும் நல்ல சீரான நிலை மாறி மிகவும் கெட்ட சூழ்நிலை வளர்ந்துவிடும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். அப்பொழுதுதான் பணக்காரர்களுக்கு உண்மையிலே கொண்டாட்டமாக இருக்கும். அதிகாரத்திலுள்ளவர்களுடைய தயவைப் பெற்றால்தான் மற்றவர்கள் முன்னுக்கு வரமுடியும் என்ற நிலையும் ஏற்பட்டுவிடும் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். ஆகையால் இரண்டு வித கருத்துக்களையும் ஆர, அமர யோசனை செய்து பார்த்ததற்குப் பிறகு எனக்குத் தோன்றிய கருத்துக்களைச் சொல்கிறேன். என்னைவிடப் பெரியவர்கள், கருத்திலே சிறந்தவர்கள் இருக்கிறார்கள், ஒழுக்கத்திலே சிறந்தவர்கள் இருக்கிறார்கள், வழி காட்டுவதிலே சிறந்தவர்கள் இருக்கிறார்கள், அவர்களும் இதைச் சிந்தனை செய்து பார்த்து வழிகாட்டக்கூடிய முறையில் நடந்து கொண்டால், அதைப் பின்பற்றுவதற்கு நாங்களும் தயாராக இருக்கிறோம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் போகும்போது கட்சிப் பிரசாரம் செய்கிறார்கள் என்று பல கனம் அங்கத்தினர்கள் இங்கே எடுத்துச் சொன்னார்கள். இதிலே எது கட்சிப் பிரசாரம்

என்பதைப்பற்றி முன்பு ஒரு தடவை இங்கே விவாதத்திற்கு வந்தது. நாடு ஒன்ருக இருக்க வேண்டும் என்று நாங்கள் சொல்வதே திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களுக்குக் கட்சிப் பிரசாரமாகத் தோன்றுகிறது.

இன்றைக்கு இருக்கும் நிலைமை என்ன? எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் அவர்களுடைய பிரசாரங்களில் அரசாங்கத்தில் இருக்கும் குறைகளை மட்டுமல்ல; மந்திரிகளைப்பற்றி பேசுவது, மற்ற நடவடிக்கைகளைப்பற்றி பேசுவது எந்த அடிப்படையில் இருக்கிறது? மந்திரிகள் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும்போது எவ்வாறெல்லாம் எதிர்க்கட்சியினர் குற்றம் குறை கூறியிருக்கிருர்கள் என்று எங்களுடைய காதுக்கு கொண்டுவரப்படும் போது அதற்குப் பதில் சொல்ல வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அப்பொழுது இந்தத் திட்டம் எதற்காக அமைக்கப்படுகிறது, எதற்காக இந்தத் திட்டத்திலுள்ள பணிகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன என்று காங்கிரஸ் அரசாங்கம் அதை எடுத்துச் சொல்லும்போது, உண்மையிலேயே அது கட்சிப் பிரசாரமாகி விடுகிறது.

ஒரு நன்மை காங்கிரஸ் அரசாங்கம் செய்திருக்கிறது என்று சொன்னுல், அந்த நன்மையை எடுத்துச் சொல்வதினுலே கட்சிக்கு வலு தேடுகிருர்கள் என்று எங்களைப் பார்த்துச் சொல்வதா என்று கேட்கிறேன். ஒரு பகுதியில் வெள்ளம் வந்து அந்தப் பகுதிக்கு முதலமைச்சர் உடனடியாகப் போய் அங்கேயிருக்கும் காரியங்களையெல்லாம் செய்தார் என்ருல், அது வோட்டு பிடிப்பதற்காக என்று சொல்வது? இலவசப் படிப்பு கொடுக்கப்படுகிறதென்ருல், இதெல்லாம் வோட்டுக்காக செய்யப்படுகிறது என்று சொல்லிவிடுவது? மக்களுக்குப் பிடித்தமான எந்தக் காரியத்தைச் செய்தாலும், அவர்களுடைய மனதைக் கவரத்தான் என்று சொல்லிவிடுவதா என்று கேட்கிறேன். ஒரு அரசாங்கம் நியாயமாக நடந்து கொள்கிறது என்ருல், அது மக்களுக்குப் பிடிக்காததைத் தானு செய்ய வேண்டும்? இப்படிப்பட்ட வாதங்களை நான் பல இடங்களில் கேட்கிறேன். இதைப்பற்றி யோசித்துப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. மந்திரிகள் பேசும்போது---மற்றவர்களும் பேசினதாகச் சொன்னுர்கள். இளைஞர் காங்கிரஸ் கூட்டத்தில் பேசுவது ஒருபுறம் இருக்கட்டும்---அதற்குப் பின்னுல் வருகிறேன். மந்திரிகள் பேசக்கூடிய இடங்களில், அவர்கள் நிறைவேற்றும் திட்டங்களை விளக்கி ஏதாவது நிர்வாகக் குறை இருந்தால் அந்தக் குறை உண்மையானதா இல்லையா என்று சொல்லும்போது, அது காங்கிரஸ் மந்திரி சபையாக இருக்கும் காரணத்தால், கட்சிப் பிரசாரம் என்று சொல்லி விடுவோமாளுல், அப்பொழுது மந்திரிகள் போய்ப் பேசுவது என்பதே முடியாது. மந்திரிகளைப் பற்றி, அவர்களுடைய நிர்வாகத்தைப்பற்றி, குறை சொல்லியிருக்கும்போது, நிர்வாகத் துறை தெரிந்தவர்கள், அதற்கு நேரடியான பதில் சொல்ல பொறுப்பு இருக்கிறவர்கள் மந்திரி சபையில் இருக்கக்கூடியவர்கள். "நீங்கள் என்ன வேண்டுமானுலும் பேசிக்

16th March 1961] [Sri C. Subramaniam]

கொண்டு போங்கள் நாங்கள் பதில் சொல்லத் தயாராயில்லை" என்று வேதாந்தங்கள் பேசிவிட்டு வந்து விடவேண்டும் என்று யாரும் எதிர்பார்க்க முடியாது. மந்திரிகள் பொதுக் கூட்டத்தில் திட்டத்தைப்பற்றிப் பேசினால், திட்டத்திலேயிருக்கும் நன்மைகளைப் பேசினால், அது தவறு ஒன்றுமில்லை. திட்டங்களில் இருக்கும் குறைகளை மற்றவர்கள் எடுத்துச் சொல்லியிருந்தால், "புள்ளி விவரங்கள் தெரியாத காரணத்தால், விவரம் தெரியாத காரணத்தால் அவ்வாறு சொல்லியிருக்கிறார்கள், அந்தக் குறை இல்லை" என்று நாங்கள் எடுத்துச் சொன்னால், உடனடியாக அதைக் கட்சிப் பிரசாரம் என்று சொல்லி விடுகிறார்கள். இதுதான் இன்றைக்கு இருக்கும் சங்கடமான நிலைமை.

இந்த இரண்டுக்கும் எல்லைகோடு (border line) போடுவது ரொம்பக் கஷ்டமானது. எந்த இடத்தில் கட்சிப் பிரசாரம் ஆரம்பிக்கிறது, எந்த இடத்தில் நிர்வாகத்தைப்பற்றி மட்டும் பேசுகிறோம் என்று வரையறுப்பது ஒரு கஷ்டமான நிலைமைதான். சில சமயங்களில் எங்களையும் அறியாமல் அந்த எல்லையைத் தாண்டிப் போன கட்டம் இருந்திருக்கலாம். மந்திரிகள் பொதுக் கூட்டங்களில் அரசாங்கத்தினுடைய கொள்கையைப்பற்றி, அவர்கள் சார்ந்திருக்கும் கட்சியினுடைய கொள்கையைப்பற்றி, நிர்வாகத்தில் இருக்கும் பல்வேறு விஷயங்களைப்பற்றி விளக்கிக்கூறக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் பொதுக் கூட்டங்களில் பேசுவதைக் கட்சிப் பிரசாரம் என்று எடுத்துக்கொள்வது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக மந்திரிகள் கலந்துகொள்கிற கூட்டத்தில்—அதுவும் முக்கியமாக இளைஞர்கள்—தவறாகப் பேசுகின்றார்கள் என்ற கருத்தைச் சொன்னார்கள். ஓரளவு அது உண்மை. ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஏன் அப்படித் தவறாகப் பேசுகிறார்கள்? அப்படிப் பேசக்கூடிய நிலைமை ஏன் ஏற்பட்டது? முன்பெல்லாம் இப்படிப் பேசிக்கொண்டிருந்தார்களா? எதிர்க்கட்சிகள் தாறுமாறாகப் பேசுகின்ற பேச்சைக் கேட்டவுடன் அவர்களுக்கு உணர்ச்சி வந்துவிடுகிறது. காலையில் எனக்கேகூட உணர்ச்சி வந்தது. (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம்: உங்களை இளைஞர்களில் சேர்க்கிறதா? அல்லது வயதானவர்களில் சேர்க்கிறதா?) என்னைப் போன்ற வயதானவர்களுக்கே உணர்ச்சி வந்துவிடுகிறது என்றால் இளைஞர்களுக்கு ஏன் வராது? எதிர்க்கட்சிகள் வரம்புமீறி பேசுகின்ற பேச்சைக் கேட்கும்போது அவர்கள் ரத்தம் கொதிக்கின்றது. நான்கூட சில சமயங்களில் இந்த இளைஞர்களை இப்படிப் பேசாதீர்கள் என்று சொல்லியிருக்கிறேன். நாங்கள் ஏதாவது சொன்னால்—அவர்களுக்கு இருக்கக்கூடிய உணர்ச்சியில் எங்களையே, "நீங்கள் வேண்டுமானால் வெளியே போய்விடுங்கள். அவர்கள் பேச்சைக் கேட்டிருந்தால் தெரியும். எங்கள் ரத்தம் கொதிக்கிறது. நாங்கள் இப்படித்தான் பேசுவோம்" என்கிறார்கள். பலவிடங்களில் இதை நிரூபிக்க முடியும். அவர்களுக்கு

அத்தனை ஆத்திரம் ஏற்படக்கூடிய முறையில் எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள் முதலில் பேசியிருக்கிறார்கள். அதன் எதிரொலி தான் எங்கள் கட்சி இளைஞர்கள் சில சமயம் வரம்புமீறி உணர்ச்சி வசப்பட்டு பேசுவதற்குக் காரணம். நான்கூடச் சொல்லியிருக்கிறேன், "நீங்கள் அவர்கள் பேசினார்கள் என்பதற்காக இப்படிப் பேசுகிறீர்கள். இந்தப் பேச்சைக்கேட்டு அவர்கள் திரும்பவும் இன்னும் மோசமாகப் பேசினால் இப்படி ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டு பேசிக்கொண்டே போனால் எங்கே முடிவது? ஆகவே ஒருவரை ஒருவர் மதித்துப் பேசப் பழகவேண்டும்", என்று எல்லா இடங்களிலும் அழுத்தந்திருத்தமாக நான் சொல்லிக்கொண்டு வருகிறேன் என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இதில் ஏதாவது நல்லதொரு முடிவைக் காண வேண்டுமென்றால், எதிர்க்கட்சிகள் எல்லாம், அரசியல் கட்சிகள் எல்லாம் சேர்ந்து ஒரு ஒப்பந்தத்திற்கு வரக்கூடுமானால் அதை நான் வரவேற்கிறேன். இன்றைக்கு கட்சிகள் வளர்வது என்றல்ல. நாடு வளரவேண்டும். நாடு வளர்ந்துகொண்டே போனாலும் ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டே போவதனால் நாட்டு மக்களுடைய பண்பு வளராது. இப்படி ஒருவரை ஒருவர் திட்டித் தாக்கிக்கொண்டே போவதனால் கட்சியும் வளராது. மக்கள் பண்பும் குறைந்துவிடும். இதுதான் அரசியல், இதுதான் அரசியல் தலைவர்களுடைய பண்பு என்பது போன்ற கருத்து இளைஞர்களுடைய சமுதாயத்தில் வளர்ந்துவிடுமானால் நாம் எத்தனை திட்டங்களை நிறைவேற்றினாலும், எத்தனை முன்னேற்றத்தைக் கண்டாலும் எந்தவிதமான பயனும் இல்லை, பண்பில் உயராத ஒரு நாடு எந்தவகையிலும் முன்னேற்றம் அடைந்துவிடாது என்பதை அழுத்தந்திருத்தமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு கருத்தும் சொல்லப்பட்டது. எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.க்களை ஜீப்புகளில் உட்கார வைத்துக்கொண்டு போகக்கூடாதா? போனால் உடைந்துபோய் விடுமா? மேடையின் பக்கத்தில் இந்த அமைச்சர்கள் உட்கார வைத்துக்கொள்ளக் கூடாதா என்றெல்லாம் சொல்கிறார்கள். எங்களோடேயே அழைத்துக்கொண்டு போக முயற்சி பண்ணியிருக்கிறோம். அழைத்துக்கொண்டும் போய் இருக்கிறோம். ஆனால் இதில் மந்திரிக்கு மட்டும் சங்கடம் இல்லை. எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.-க்களுக்கே ஒரு சங்கடமான நிலைமை ஏற்படுகிறது. சாதாரணமாக அந்த ஊரிலேயே, பொதுக் கூட்டத்தில் கண்டபடி மந்திரிகளைப்பற்றிப் பேசிவிட்டு நாங்கள் வந்தவுடன் எங்களோடு எங்கள் காரில் நீங்கள் வந்தால் அந்த ஊர் மக்கள்தான் உங்களைப்பற்றி என்ன நினைப்பார்கள்? திரு. அண்ணாதுரை அவர்கள் ஒரு உண்மையைச் சொன்னார்கள், "மந்திரிகள் நடிகர்கள் அல்ல" என்று. அது உண்மை. நீங்கள் ஒரு பக்கத்தில் எங்களை திட்டு திட்டு என்று திட்டிவிட்டு மறுபடியும் எங்களோடேயே வந்தால் "நாங்கள் எல்லாம் ஒன்று" என்று நடிப்பது போல இருக்காதா? இப்படிப் பட்ட தர்மசங்கடமான நிலைமையில் கனம் அங்கத்தினர்களை

16th March 1961] [Sri C. Subramaniam]

வைக்கக் கூடாது என்பதோடு, எங்களையும் சங்கடத்திற்கு ஆளாக்கிக்கொள்ளாமல் இருக்க அப்படி விட்டுவிட்டுப் போய் விடுகிறோம். எதிர்க்கட்சி அங்கத்தினர்களை ஒதுக்கி வைக்க வேண்டுமென்பதற்காக அல்ல. எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் என்பதற்காக யாரையும் ஒதுக்கி வைப்பதில்லை. யாருடனும் பேசாமல் இருப்பதும் இல்லை. கோவையில் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர் சேர்மனாக இருப்பதனால் அவரோடு நான் பேசுவது இல்லையா? அவர் கலந்துகொள்கிற கூட்டங்களில் நான் கலந்து கொள்வதில்லையா? ஆகையால் இது ஏதோ மற்றவர்களை ஒதுக்கி வைத்துவிடுகிற செயல் என நினைத்துக்கொள்ள வேண்டாம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த அடிப்படையில் ஒவ்வொன்றையும் நாம் பார்க்கும்போது மந்திரிகள் மட்டும் அங்கத்தினர்களுக்கு மதிப்புக் கொடுப்பது என்று இல்லை. அங்கத்தினர்களும் மந்திரிகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். இந்த மதிப்பு, மரியாதையில் பரஸ்பரம் இருக்க வேண்டியது. மந்திரிகள் மட்டும் மரியாதை செய்ய வேண்டுமென்று கனம் அங்கத்தினர்கள் எதிர்பார்ப்பதற்கில்லை. "திரு. காமராஜ் அவர்கள் முதல் மந்திரியாக இருக்கத் தகுதி இல்லாதவர்கள்" என்று சிலர் நினைக்கலாம். குறிப்பாக திரு. அண்ணாதுரை அவர்கள் "திரு. காமராஜர் முதல் மந்திரியாக இருப்பதற்குத் தகுதி இல்லை" என்று சொன்னால் அது அவருடைய தனிப்பட்ட கருத்து. அதை அவர் வைத்துக்கொள்ள உரிமை இருக்கிறது. ஆனால் தகுதி இல்லாத ஒருவரே முதன் மந்திரியாக இருக்கிறார் என்று வைத்துக்கொண்டாலும்கூட, அவர் முதன் மந்திரியாக இருக்கும் வரையில் எல்லாவிதமான மதிப்பையும், மரியாதையையும், கௌரவத்தையும் அவருக்கு நாம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

SRI C. N. ANNADURAI : அமைச்சர் அவர்கள் வாதத்திற்காக திரு. அண்ணாதுரை அவர்கள் சொன்னார் என்று சொல்கிறாரா, அல்லது நான் சொன்னதாகவே சொல்கிறாரா?

THE HON. SRI C. SUBRAMANIAM : "கக்கனைப்பற்றி மட்டும் சொல்லவில்லை. காமராஜரையும் சேர்த்துத்தான் சொன்னேன்" என்பதாக திரு. அண்ணாதுரை அவர்கள் இங்கேயே பேசியதாகக் கேள்விப்பட்டேன்.

SRI C. N. ANNADURAI : தகுதியில்லாதவர் என்பதற்காக அப்படிச் சொல்லவில்லை. முதல் தடவையாக எடுத்த எடுப்பிலே அமைச்சராக வந்தவர்கள்—முன்னைய அனுபவம் இன்றி வந்தவர்கள் என்பதற்காகச் சொன்னேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : முந்தைய அனுபவம் இல்லாதவர் என்றோ எடுத்த எடுப்பிலே வந்தவர் என்றோ சொன்னால் அது சரியானதாகாது. திரு. காமராஜ் அவர்கள் முன்பு விருதுநகர் முனிசிபல் சேர்மனாக இருந்திருக்கிறார். தொடர்ந்து இச்சபை மெம்பராக இருந்திருக்கிறார். பார்லிமெண்டு

அங்கத்தினராக இருக்கிருக்கிறார். அவர் ஒன்றும் எடுத்த எடுப்பிலே வந்துவிடவில்லை. அதைப் போலவே திரு. கக்கன் அவர்களும் சட்டசபை மெம்பராக பணியாற்றியிருக்கிறார். பார்லிமெண்ட் மெம்பராகப் பணியாற்றியிருக்கிறார்.

**SRI C. N. ANNADURAI :** அமைச்சர் அவர்கள் நான் அன்றைக்குச் சொன்ன கருத்தைத் தவறாகச் சொல்கிறார். நேரடியாக மந்திரியாக வந்தவர்கள் என்பதற்குச் சொன்ன வார்த்தைகளை துண்டாக நடுவில் இழுத்து "திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் திரு. காமராஜ், கக்கன் இவர்களுக்குத் தகுதி இல்லை" என்று சொன்னதாக இழுத்துவிட வேண்டாம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** என்னைச் சொன்னால் பொருத்தமாக இருந்திருக்கும். நானும் எடுத்த எடுப்பில்தான் மந்திரியாக வந்தவன். சாதாரண சுப்பிரமணியனாக இருந்து, உடனே அமைச்சர் சுப்பிரமணியமாக ஆனேன். இதை வேண்டுமென்றால் அதிருஷ்டம் என்றோ, சான்ஸ் என்றோ, ஆக்ஸிடெண்ட் என்றோ—எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால் அவர்களைப் பிரித்து வைத்துப் பேசியதில் இருந்தே அத்தகைய கருத்து உங்கள் மனத்தில் இருப்பதனால்தான் அந்த வார்த்தை வெளி வந்ததே தவிர, இல்லாவிட்டால் அப்படி வந்திருக்காது. ஆனால் ஒன்று.

நான் இன்றையதினம் இந்தப் பதவியில் இருப்பதற்குக் கொஞ்சங்கூடத் தகுதி இல்லாதவன் என்று நீங்கள் நினைத்தாலும் கூட இந்தப் பதவியில் இருக்கும்வரையில்—இந்தப் பதவிக்கு உரிய மரியாதை, கௌரவம், மதிப்பு எல்லாம் எனக்கு நீங்கள் அளித்தாகவேண்டும். அதுவும் ஜனநாயக முறையில் பதவிக்கு யார் வேண்டுமானாலும் வரலாம் என்று ஏற்பட்ட பிறகு அதற்கேற்ற முறையில் எல்லா மதிப்பையும் அந்தப் பதவியில் உள்ளவர் எப்படிப்பட்டவராக இருந்தாலும் கொடுக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். இல்லாவிட்டால் நம்மை நாமே இழிவுபடுத்திக் கொள்கிறவர்களாவோம். அதுவும் முக்கியமாக திராவிட முன்னேற்றக் கட்சி பெண் அங்கத்தினருக்கு குறிப்பாக வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**SRIMATHI SATHYAVANIMUTHU : On a point of order, Sir.** தலைவர் அவர்களே, நிதி மந்திரி அவர்கள் பேசுகின்ற போது "திராவிட முன்னேற்றக் கட்சி பெண் அங்கத்தினருக்குக் குறிப்பாக வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்" என்று குறிப்பிட்டார்கள். நான் எங்கே எப்போது எப்படித் தவறாகப் பேசினேன் என்பதை அவர் குறிப்பிட்டால் நான் ஏற்றுக் கொள்வதற்குத் தயாராக இருக்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அதுவும் என்னுடைய சகோதரி என்ற முறையில் நான் தெரிவித்துக்கொள்கிறேன். அவர்கள் அப்படி பேசுவது எங்களை இழிவுபடுத்தினதாக ஆகாது.

16th March 1961] [Sri C. Subramaniam]

அது அவர்களுக்கே பெருமை தராது. அவர்கள் எந்த முறையில் பேசி வருகிறார்கள் என்பதுபற்றிய தகவல் எனக்குக் கிடைத்திருக்கிறது. சுருக்கமாகச் சொல்லப் போனால் அவர்கள் எந்தக் கூட்டத்தில் எங்கே, எப்பொழுது ஒழுங்காகப் பேசினார்கள் என்பதைக் கண்டு பிடிப்பதுதான் கஷ்டமாக இருக்கும்.

திரு. ஆசைத்தம்பி அவர்கள் கூட்டம் போடுவதைப்பற்றிச் சொன்னார்கள். நம்முடைய அருமையான குரலைத்தான் எல்லோரும் கேட்கட்டுமே என்றார்கள். நம்முடைய குரல் அருமையானது என்று நாம் நினைத்துக்கொள்ளலாம். எல்லோரும் அதைக் கேட்க வேண்டுமென்று ஆசைப்படலாம். ஆனால் சந்து பொந்துகளில் தெரு மூலைகளில்—அதுவும் சாதாரணப் பேச்சல்ல—ஒலிபெருக்கியும் வைத்து—தாறுமாறாக நாம் பேசக்கூடிய பேச்சை அந்தத் தெருவில் உள்ள அத்தனை பேர்களும் கேட்கவேண்டும் என்றால்—நாம் நினைக்கலாம் அவர்கள் கேட்கட்டுமே என்று. ஆனால் அவர்கள் அப்படி நினைக்கவேண்டுமே. அதுவும் இரவு 9 மணி வரையில் கூட அல்ல, பத்துப் பத்தரை மணிக்கு மேலும் கேட்கவேண்டும் என்றால் அதை அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். எப்படி அரசியல் கட்சிகளுக்கு உரிமை இருக்கிறதோ, அப்படியே தனிப்பட்டவர்களுக்கும் அதைவிட அதிக உரிமை இருக்கிறதென்று தெரிவித்துக்கொள்கிறேன். இடுக்குமுடக்கான இடங்களில் ஏதோ எப்போதோ ஒரு கூட்டம் என்றாலும் பரவாயில்லை. தேர்தல் காலம் வந்துவிட்டது, ஆகவே, பிரசாரம் நடந்தாகவேண்டும் என்றாலும் ஒரு 3 மாதத்திற்கு, 6 மாதத்திற்கு அதைப் புரிந்துகொள்ள முடியும்.

வருடம் பூராவும் இப்படித்தான் பேசிக்கொண்டிருப்போம், அதுவும் ஒலிபெருக்கி வைத்துத்தான் பேசிக்கொண்டிருப்போம், அதை அனுமதிக்க வேண்டுமென்று சொன்னால் ஏன் நாம் சுதந்திரம் பெற்றோம், இதுவா ஜனநாயகம் என்று மக்கள் நினைக்கக் கூடிய நிலைதான் ஏற்படும். தேர்தல் காலத்தில் என்ன செய்ய வேண்டுமென்பதுபற்றி உட்கார்ந்து பேசத் தயார். சென்ற காலத்தில்கூட எங்கெங்கு எந்தெந்தயிடங்களில் கூட்டங்கள் எப்பொழுது எப்பொழுது போடலாம் என்று பேசி அப்படி அதற்கேற்ப செய்யப்பட்டது. பின்னர், தேர்தல் காலத்தில் அதிகாரி 1 p.m.
களை கூட்டிச் செல்லக் கூடாது என்று சொல்லப்பட்டது. முன்பு கூட எங்களுக்குள் ஒரு கட்டுப்பாடு செய்து கொண்டிருந்தோம். இந்தத் தடவைகூட தேர்தல் காலத்தில் அந்தக் கட்டுப்பாட்டை எங்களுக்கு நாங்களே விதித்துக்கொள்ள வேண்டுமென்ற அடிப்படையில் அதற்கான யோசனைகள் செய்துகொண்டு வருகிறோம். அதிகாரிகளை வைத்துக்கொண்டு காங்கிரஸ்காரர்கள் வோட்டுப் பெற நினைக்கிறார்கள் என்றால், அதிகாரிகள் சொல்வதைக் கேட்டு அல்லது அவர்களைப் பார்த்து மக்கள் வோட்டு போட்டு விடுவார்கள் என்ற பயம் எதனால் ஏற்பட்டதென்பது எனக்கு புரியவில்லை.

இது உண்மையில் ஏற்பட்ட பயமா அல்லது காங்கிரஸ்காரர்கள் பெயரில் ஏதாவது குற்றம் சொல்ல வேண்டுமே என்று சொல்கிறார்களா என்று தெரியவில்லை. பத்து மணி அல்லது இரவு 12 மணி வரை கூட்டம் போட அனுமதிக்க வேண்டுமென்றால், ஒரு மணி வரை கூட வைத்துக்கொள்ள லைசென்ஸ் கொடுத்துவிடச் சொல்கிறேன், ஆனால் மக்கள் அதைப் பொறுத்துக் கொள்வார்களானால் எனக்கு ஆட்சேபணையில்லை. தேர்தல் காலத்தில் மக்கள் 10 அல்லது 11 மணிக்கு பின்னராவது சிறிது தூங்குவதற்குள்ள நிலையை நாம் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். ஆகவே, எப்படி இதை வகுத்துக்கொள்ள வேண்டுமென்பதுபற்றி பரிசிலனை செய்ய வேண்டுமென்றால் அதற்கு நான் தயாராயிருக்கிறேன். எந்த முறையில் இதை வைத்துக்கொள்ள வேண்டுமென்பதைப்பற்றி பரிசிலனை செய்ய காங்கிரஸ் கட்சி தயாராயிருக்கிறது. அடுத்தபடியாக, திரு. ராமஸ்வாமி முதலியார் அவர்கள் பேசுகிறபோது, எங்கு பார்த்தாலும் லஞ்சம், எங்கும் ஊழல்கள் மலிந்து விட்டன என்று வற்புறுத்திக் கூறினார்கள். அவர்கள் நல்ல அநுபவம் உள்ளவர்கள், ஆகவே, அப்படிப்பட்டவர் இப்படி பொதுவாக சொல்வார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இதுபற்றி நான் பல தடவை கூறியிருக்கிறேன். இன்று லஞ்சம் இல்லையென்று நான் கூறவில்லை. ஊழல்கள் இல்லை என்று நான் கூறவில்லை. ஆனால் பொறுப்புள்ள எதிர்க்கட்சித் தலைவர்கள், இப்படி லஞ்சம் எங்கு பார்த்தாலும் இருக்கிறது, ஊழல்கள் இருக்கிறதென்று சொன்னால் ஒரு சமயம், லஞ்சம் வாங்காது இருக்கக்கூடியவர்கள், அவர்கள் 10 சதவிகிதம், 20 சதவிகிதம் அல்லது 70 சதவிகிதம், எவ்வளவு பேர்கள் இருந்தாலும், அவர்கள் நினைப்பார்கள், எதிர்கட்சித் தலைவர் அவர்களே சொல்லியிருக்கிறார்களே, எங்கு பார்த்தாலும் எல்லோரும் லஞ்சம் வாங்குகிறார்கள் என்று, அப்படியிருக்க நான் மட்டும் லஞ்சம் வாங்காதிருந்தால், நான் முட்டாள் போலிருக்கிறதே என்று லஞ்சம் வாங்காதிருப்பவர்களும் லஞ்சம் வாங்குவதற்குள்ள சூழ்நிலையை அது ஏற்படுத்தக் கூடும். ஆகவே, இப்படி பொதுப்படையாக எங்கு பார்த்தாலும் லஞ்சம் இருக்கிறது, லஞ்சம் இருக்கிறது என்று சொல்லிக்கொண்டேயிருந்தால் அது லஞ்சத்தை வளர்க்க பயன்படுமே தவிர அதை ஒழிப்பதற்கு பயன்படாது. பின்னர், இதில் இரண்டு கட்சியிருக்கிறது, லஞ்சம் கொடுக்கிறவர்கள், லஞ்சம் வாங்குகிறவர்கள். நாட்டில் எந்தளவு நேர்மை வளர்கிறதோ அந்த அளவிற்குத்தான் லஞ்சத்தை ஒழிக்க முடியும். அதற்குள்ள ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த நாம் முயற்சிக்க வேண்டும். அப்படி லஞ்சத்தை ஒழிப்பதற்குள்ள ஒரு சூழ்நிலையை நாம் ஏற்படுத்தாவிட்டால் நம் பிற்கால சந்ததியினரும், பின்னர் வருகிற நிர்வாகமும் சீர்குலைந்துதான் போகும். பின்னர், நாம் போடுகிற உத்தரவுகள், கட்சி அடிப்படையில் ஒரு கட்சிக்கு சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ போடக்கூடிய முறையில், இந்த உத்தரவை ஏன் போட்டார்கள், எப்படிப் போட்டார்கள் என்று குறிப்பிட்டு சொன்னால் அதைபற்றி எடுத்துச் சொல்ல தயாராயிருக்கிறேன். ஆனால் பொதுவாகச் சொன்னால், உண்மை

16th March 1961] [Sri C. Subramaniam]

யில் தவறு ஏதாவது ஏற்பட்டிருக்கிறதா?- என்பதைப் பார்ப்பதற்குக்கூட ஒரு சந்தர்ப்பம் இல்லாது போய்விடுகிறது. சேலத்தில் நடந்த நிகழ்ச்சியைப்பற்றி குறிப்பிட்டார்கள். அங்கு நடந்ததைப்பற்றி, அது காங்கிரஸ் கட்சியாகயிருந்தாலும் சரி, திராவிட முன்னேற்றக் கழகமாகயிருந்தாலும் சரி, அல்லது ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கு கொண்டாட்டம் என்று சொல்வார்களே, யாராகயிருந்தாலும் சரி, தவறு செய்தவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுத்தான் வருகிறது. இடையில் இருந்துகொண்டு, ஏதாவது நடக்கும்போது, போக்கிரிகள், சாக்கிரிகள் இவர்கள் இடையில் புகுந்து அதை வளர்க்கும் முறையில் செயல்படுகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆக, எந்தக் கட்சியைச் சார்ந்தவர்களாக யிருந்தாலும் சரி, எந்தத் துணியைப் போட்டுக் கொண்டிருந்தாலும் சரி, நியாயத்திற்கு, சட்டத்திற்கு விரோதமாக நடந்தால் அவர்கள் பேரில் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற அடிப்படையில்தான் இந்த சர்க்கார் பணி புரிய முயற்சி செய்து வருகிறது. எங்குமே, குற்றமே நடக்கவில்லை என்று நான் சொல்லவில்லை அதை தனியாக எடுத்துச் சொல்ல வேண்டும். அவைகளைத் தவிர்ப்பதற்கு எங்களாலான முயற்சியைச் செய்கிறோம் என்ற உறுதியை நான் அளிக்க விரும்புகிறேன். எங்கும் லஞ்சம் இருக்கிறது, ஊழல் எங்கும் மலிந்துவிட்டதென்று சொல்லிக்கொண்டே யிருந்தால், எப்பொழுதும் அதை பொதுப் படையாக சொல்லிக்கொண்டிருந்தால், இது எப்பொழுதும் பாடப் படும் பல்லவி, ஆகவே, இப்பொழுதும் அதை கேட்டுவிட்டு போய் விடுவோம் என்ற உணர்ச்சிதான் அமைச்சர்கள் மனதில் ஏற்படுமே தவிர இதை நீக்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட முடியாது. அதனால் தப்பு இன்னும் அதிகமாகத்தான் ஆகும். இதனால் பின்னால் வரக்கூடியவர்கள் பாதிக்கப்படுவார்கள். தவறே இல்லை யென்று சொல்லவில்லை. இருக்கக்கூடிய தவறுகளை குறிப்பிட்டுக் கூறினால் அதை திருத்த முடியும். ஆக, தவறுகளை திருத்துவதற்கு முயற்சி செய்து கொண்டு வருகிறோம். எல்லாத் தவறுகளையும் ஒரேயடியாக நீக்கிவிட வேண்டுமென்று சொன்னால் அது என் கோபத்தை உடனே விட்டு விட வேண்டுமென்று நான் உறுதி யெடுப்பதுபோல்தான் இருக்கும். நமது தவறுகளை நீக்குவதற்கு எதிர்கட்சிகளின் ஒத்துழைப்பு தேவை. ஒன்றுமே சரியாக நடப்பதில்லை, லைசென்ஸ் அல்லது பேர்மிட் வழங்குகிற சர்க்கார் இது என்றெல்லாம் பிரசாரம் செய்து கொண்டு போனால் இப்பொழுது வேண்டுமானால் மக்களிடையே ஒரு அதிருப்தியை ஏற்படுத்தி அதை வளர்க்க உதவலாமே தவிர அதனால் பிற்காலம் எப்படி அமையும் என்று பார்க்க வேண்டும். அதனால் ஒரு சமயம் எல்லாம் ஊழல் மயமாகவே போய்விடும். என்ற பயம்தான் ஏற்படுகிறது. அதனால் பிற்காலத்தில் வரக் கூடியவர்கள் பாதிக்கப்படுவார்கள். நாட்டின் நலனை மனதில் வைத்துக்கொண்டு குற்றங்களை தைரியமாக எடுத்துச் சொல்ல யாரும் தயங்கக் கூடாது. அப்படி யில்லாது, எங்கு பார்த்தாலும் லஞ்சம், ஊழல் என்று பொதுப்

படையாகச் சொல்லிக் கொண்டிருப்பது நாட்டின் நன்மைக்கு உகந்ததல்ல. கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர், கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள், எல்லாக் கட்சிகளுக்கும் சம உரிமைகள், வசதிகள் கொடுக்க வேண்டுமென்பதுபற்றி. அவர் அப்படி பேசியதுபற்றி நான், அதை வரவேற்கிறேன். விவாதத்திற்காக அல்லாது உண்மையில் அவர்கள் இதை கொள்கையாக ஏற்று ஒரு நாட்டில் எல்லாக் கட்சிகளுக்கும் வேண்டிய உரிமை கொடுக்க வேண்டுமென்ற கொள்கையை ஏற்று, அதை உண்மையில் ஏற்றுக் கொள்வார்களேயானால், தற்காலிகமாக யல்லாது, ஏற்றுக்கொள் வார்களேயானால் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன், அவர் கம்யூனிஸ்ட் கட்சியில் இருக்க முடியாது. அவர் ஒரு கம்யூனிஸ்ட்டாக இருக்க முடியாது, அப்பொழுது. கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை, ஒரே ஒரு கட்சி ஆட்சியில் நம்பிக்கை கொண்டது. இல்லையானால் அது கம்யூனிஸ்ட் கொள்கையல்ல. விவாதத்திற்கு வேண்டுமானால், இப்பொழுதிருக்கக்கூடிய நிலையில் வேறு வழியில்லை. ஆகவே, வேறு விதத்தில் பேச வேண்டுமென்று நினைத்தால், அதுவும் கம்யூனிஸ்ட் கட்சியின் தத்துவம்தான். சமயத்திற்கு தகுந்தவாறு, சந்தர்ப்பத்திற்கு தகுந்தவாறு கொள்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டும், பேச்சுக்களை மாற்றிக்கொள்ள வேண்டும் என்பது கம்யூனிஸ்ட் கட்சியில், அவர்கள் வேதத்தில் சொல்லி வைத்திருப்பது என்பதை நான் அறிவேன். இது எங்கள் கட்சிக் கொள்கை, நாங்கள் மெஜாரிட்டி பெற்றாலும், கேரளத்தில் மெஜாரிட்டி பெற்றால் மட்டுமல்ல, அகில இந்திய ரீதியில் மெஜாரிட்டி பெற்றாலும் மற்ற கட்சிகளை விட்டு வைத்திருப்போம், அவைகளை அப்படியே வைத்திருப்போம் என்று அவர்களோடு கூட்டுச் சேர்ந்தவர்கள் நினைப்பார்களானால் மற்ற நாடுகளில் ஏற்பட்ட கதிதான் அவர்களுக்கும் ஏற்படும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நான் கூட்டுச் சேரவேண்டாமென்று சொல்லவில்லை.

SRI C. N. ANNADURAI : அமைச்சர் அவர்கள் நாங்கள் கூட்டுச் சேர்ந்திருக்கிறோம் என்று விவரம் தெரியாமல் பேச வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கூட்டு சேரவில்லை என்றால் சரி, அதை அறிந்துகொள்ளத்தான் நானும் விரும்புகிறேன்.

SRI C. N. ANNADURAI : விவரங்களை தெரிந்துகொள்ளாமல் எதையாவது பேசுவது சரியல்ல . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : விவரம் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான் என்னுடைய ஆசை. நான் முன்னால் அவர்களுக்கு பதில் சொல்லவேண்டும் என்று நினைத்தேன் அதை அப்போது சொல்லவில்லை, இப்போது அதைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். கனம் அண்ணாதுரை அவர்கள் அடுத்த வீட்டு ஜன்னலை எட்டிப் பார்க்கக்கூடாது என்றும் பர்தா முறை

16th March 1961] [Sri C. Subramaniam]

இருக்கும் அதையும் பார்க்கக்கூடாது என்றும் அன்று குறிப்பிட்டார்கள். வாஸ்தவம்தான். அவ்விதம் பர்தாவை தூக்கிப் பார்க்கிற பழக்கம் எனக்கு கிடையாது. அவர்கள் வேண்டுமானால் அவ்விதம் பார்த்துக் கொள்ளட்டும். ஆனால் அரசியல் பர்தாவுக்குள் ஏதாவது நடந்தால் அதை கிழித்துப் பார்க்க வேண்டியது மிகவும் அவசியம். அரசியல் கட்சி என்று வெளியில் வந்துவிட்டால், அந்த கட்சிக்குள் என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்கு வெளியிலுள்ளவர்களுக்கு உரிமையிருக்கிறது. அதைச் சொல்லிக்கொள்வதற்கு எனக்கும் உரிமை யிருக்கிறது. ஆகவே, அவர்களும் அந்த விவரங்களை தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய கொள்கை திராவிட நாடு பிரிய வேண்டும் என்பது. இப்போது இருக்கின்ற கான்ஸ்டிடியூஷன் இருக்கக்கூடாது, வேறு கான்ஸ்டிடியூஷன் இருக்க வேண்டும் என்பதும் அவர்களுடைய கொள்கை. அந்த அளவுக்கு ஒளிவு மறைவில்லாமல், அதை வெளியில் எடுத்துக் கூறி, இதற்கு மக்களிடத்தில் எங்களுக்கு ஆதரவு இருக்கிறது என்பதை காட்ட வேண்டுமானால், இதைச் சொல்லி தேர்தலில் நிற்க வேண்டும். அதல்லாமல் அதை வெளியில் சொல்லாமல், வேறு எதையெல்லாமோ சொல்லி, மக்களை ஏமாற்றுகின்ற முறையில் சதி செய்ய வேண்டாம் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். உண்மையிலே மற்ற கட்சிகளுடன் சேர்ந்து தேர்தலில் நிற்கிறார்கள் என்றால், இவர்களுடைய நாட்டுப் பிரிவினைக் கொள்கையை கனம் திரு. கல்யாண சுந்தரம் அவர்களின் கட்சி ஒப்புக்கொள்கிறதா, அல்லது சுதந்திரக் கட்சி ஒப்புக்கொள்ளுகிறதா, அல்லது சோஷியலிஸ்ட் கட்சி ஒப்புக் கொள்ளுகிறதா என்று கேட்க விரும்புகிறேன். இவ்விதம் கூட்டுச் சேருகின்ற எந்தக் கட்சியுமே ஒப்புக்கொள்ளாதபோது, எப்படி இவர்களுக்கு நாட்டுப் பிரிவினைக் கொள்கை பொருந்தும் என்று தெரியவில்லை. நாட்டுப் பிரிவினைதான் எங்கள் கட்சியின் கொள்கை என்றால், அதை மட்டும் தனியாக வைத்து தைரியமாக தேர்தலில் போட்டியிட வேண்டும். அவ்விதம் வருவதாக இருந்தால் நாட்டுப் பிரிவினை கொள்கையில் இவர்களுக்கு நம்பிக்கை யிருக்கிறது என்று எடுத்துக்கொள்ள முடியும். அந்த அடிப்படையில் தேர்தலில் நின்று பார்க்கட்டும், மக்கள் அதற்கு எந்த அளவில் ஆதரவு அளிக்கிறார்கள் என்பதை நாம் அறிந்துகொள்ள முடியும். அப்படி யில்லாமல் மற்ற கட்சிகளுடன் கூட்டு என்று சொன்னால், கம்யூனிஸ்ட் கட்சியை எடுத்துக்கொண்டால், அவர்கள் இந்தியா மட்டுமல்ல, உலகமே ஒன்றாக இருக்கவேண்டும் என்றுள்ள அடிப்படையில் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களோடு இவர்கள் கூட்டு சேருவது என்று சொன்னால்—அதிலும் நாடு ஒன்றாக இருக்க வேண்டும், பெடரல் அமைப்பாக இருக்கக்கூடாது. யூனிட் அமைப்பில் இருக்கவேண்டும் என்று சொல்லுகின்ற கட்சியோடு சேர்ந்து கொண்டு தேர்தலுக்கு வருகிறார்கள் என்றால், இவர்களுடைய பேச்சுக்கள் மக்களை ஏமாற்றுவதற்காகத்தான்

இருக்கும். அதல்லாமல் இந்தவிதமான கூட்டு ஒன்றும் சேராமல் இவர்களுடைய நாட்டுப் பிரிவினையை மட்டும் தேர்தல் கொள்கை யாக வைத்து தேர்தலில் போட்டியிட்டால் மக்களிடையே இவர் களுக்கு இருக்கும் பலத்தை அறிந்துகொள்ள முடியும் . . .

**SRI C. N. ANNADURAI**: அமைச்சர் அவர்கள் துவக்கத்தி லிருந்தே குழப்பத்தில் இருக்கிறார்கள். நான் சொல்ல விரும்பு வது, திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும், கம்யூனிஸ்ட் கட்சிக்கும், சுதந்திரா கட்சிக்கும் கூட்டு என்பது கிடையாது. தேர்தல் நேரத்தில் செய்து கொள்ளுகின்ற அட்ஜஸ்ட்மெண்ட் தான். அதல்லாமல் திராவிட முன்னேற்றக் கழகம் எப்போதும் தன் கொள்கையை விட்டுவிடப் போவதில்லை.

**THE HON. SRI C. SUBRAMANIAM**: கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்ன ஆங்கிலத்தை நான் எனக்குத் தெரிந்த தமிழில் சொன்னேன். அவ்வளவு தான் . . . . . . (சிரிப்பு.)

**SRI C. N. ANNADURAI**: கூட்டு என்பதற்கும் அட்ஜஸ்ட் மெண்ட் என்பதற்கும் வித்தியாசம் கிடையாதா? . . . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM**: கூட்டுச் சேர்ந்து அனுபவிப்பதும் கூட்டுதான், ஒன்று சேர்ந்து பங்குப் போட்டுக் கொள்வதும் கூட்டுதான். அடுத்தபடியாக, சில முக்கியமான விஷயங்களை சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். சட்டமன்ற அங்கத்தினர்கள் தங்குகின்ற விடுதியில் (ஹாஸ்டல்) வசதிகள் போதாது, அறைகள் எல்லாம் மிகவும் மோசமாக இருக்கிறது என்று பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். அதை நான் முழுக்க முழுக்க ஒப்புக்கொள்கிறேன். அதைப்பற்றி என்னென்ன நட வடிக்கைகள் எடுக்க முடியுமோ அவற்றை எல்லாம் எடுத்துக் கொள்ளலாம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். கனம் திரு. கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள் என்று நினைக்கிறேன், மூன்று அறைகளை மாற்றி இரண்டு அறைகளாக்கி விடலாம் என்று அபிப்பிராயம் தெரிவித்தார்கள். அப்படி ஒட்டுப்போட்டுக் கொண் டாலும் இதே கஷ்டம்தான் இருக்கும். ஆகவே, இன்னொரு மாளிகை கட்ட வேண்டும், மாளிகை என்று சொல்லும்போது, பெரிய மாளிகை கட்டவேண்டும் என்பதல்ல, போதுமான அளவுக்கு எல்லா வசதிகள் இருக்கக்கூடிய ஒரு கட்டிடத்தை கட்டுவதற்கு சர்க்கார் நிச்சயமாக ஆலோசனை செய்யும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். அது கட்டுவது வரையிலும் இந்த விடுதிலேயே என் னென்ன வசதிகள் செய்ய முடியும் என்பதைப் பார்த்து அதற்கு தக்கபடி செய்துகொள்ளலாம். சில சமயங்களில் நாம் கோரு கின்ற சாமான்கள் கிடைப்பதில்லை, உதாரணமாக மெத்தை வசதி செய்து கொடுப்பதற்காக நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது, போதுமான மெத்தைகள் ஒரேயடியாக கிடைக்கவில்லை, இருந் தாலும் எல்லா வசதிகளையும் செய்துகொடுப்பதற்கு உத்தரவு போடப்பட்டிருக்கிறது. மேலும் என்னென்ன வசதிகள் உடனடி யாக செய்து கொடுக்க முடியுமோ அவற்றிற்கு எல்லாம் ஏற்பாடு செய்யப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். காலையில்

16th March 1961] [Sri C. Subramaniam]

அங்கத்தினர்கள் போய் குளிப்பதற்கு வசதியில்லை, திருவல்லிக்கேணியிலுள்ளவர்கள் எல்லாம் இங்கேதான் குளிக்கிறார்கள் என்று எண்ண வேண்டியிருக்கிறது என்று சொல்லப்பட்டது. இதற்கு எந்தத் தனிப்பட்ட மெம்பரையும் குற்றஞ் சாட்ட முடியாது. இதில் கொஞ்சம் கண்டிப்பாக இருக்க வேண்டியிருக்கிறது. கண்டிப்பு இல்லாமல் இருக்கும்போது வரையறை யில்லாமல் யாரெல்லாமோ வர ஆரம்பித்து விடுகிறார்கள். அவ்விதம் வருகிறவர்கள் பேரில் ஏதாவது நடவடிக்கை எடுத்தால் அதுவும், அங்கத்தினர்களுக்கே அது கெடுதியாக முடிகிறது. ஆகவே, நாமே ஓரளவுக்கு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக்கொள்ள முடியும். அப்போது தான் வெளியார் அதிகமாக வருவதை தடுக்க முடியும். அறைக்குள்ளேயே குளிப்பதற்கும் வசதி இருந்து விட்டால் இந்தத் தொந்தரவுகள் இராது. அதை புதிய கட்டிடம் கட்டும்போது ஏற்படுத்தலாம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று நான் சொல்ல விரும்புவது, அங்கத்தினர்களுக்கு இப்போது கொடுக்கப்படும் சம்பளம் போதாது என்கிற கருத்தை பல அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். இதில் சர்க்காருக்கு எந்த விதமான கருத்தும் கிடையாது. எதிர்கட்சியிலுள்ள தலைவர்கள் கலந்து ஆலோசித்து இப்போது கொடுக்கக்கூடிய 150 ரூபாய் போதாது, 300 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று சொல்லுவதாக இருந்தால் நிச்சயமாக சர்க்கார் அதை பரிசீலனை செய்வதற்கு தயாராக இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். வேண்டுமென்றால் காங்கிரஸ் கட்சியிலுள்ள சில அங்கத்தினர்களும், மற்ற கட்சி அங்கத்தினர்களில் சிலரும் சேர்ந்து இதைப்பற்றி ஆலோசித்து இப்போது கொடுக்கப்படும் சம்பளத்தை அதிகரிக்க வேண்டும் என்ற கருத்தை தெரிவித்தால் அதையும் சர்க்கார் பரிசீலிக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, போக்குவரத்து வசதிகளில், அங்கத்தினர்களுக்கு ரயிலில் பாஸ் கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி கழிந்த ஏழெட்டு வருடங்களாக வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. இதை ஓரிடத்தில் கொண்டுவந்து பார்த்தார்கள். இதனால் பல சங்கடங்கள் இருக்கின்றன என்று ரயில்வே இலாகாவினர் தெரிவிக்கிறார்கள். ஒவ்வொரு தடவையும் ரயில்வே இலாகாவோடு இதைப் பற்றி வற்புறுத்தும்போது, அவர்கள் நாம் சொல்லுவதற்கு மேலாக வேறு ஏதாவது காரணங்களை சொல்லக்கூடிய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இன்றைக்கு இதன் பேரில் நடவடிக்கை எடுக்க முடியாத நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. அதற்கு மேல், எக்ஸ்பிரஸ் பஸ்ஸுக்கு, பாஸ் கொடுத்தால் என்ன என்று கேட்கப்பட்டது. இப்போது எக்ஸ்பிரஸ் பஸ் எல்லா இடங்களுக்கும் போகவில்லை. சில இடங்களுக்கு மட்டும்தான் போகிறது. எல்லா இடங்களுக்கும் எக்ஸ்பிரஸ் பஸ் விட்ட பின்னால் வேண்டுமென்றால் இதைப்பற்றி ஆலோசனை செய்யலாம். சாதாரணமாக

[Sri C. Subramaniam] [16th March 1961

தூரமான இடங்களுக்கு போவது என்றால், என்னுடைய அனுபவத்தை வைத்துக்கொண்டு சொல்லுகிறேன், எல்லோரும் அப்படித்தான் செய்யவேண்டும் என்று சொல்லவில்லை. மோட்டாரில் போவதைவிட ரயிலில் போவதுதான் சௌகரியமாக இருக்கிறது. பஸ்ஸில் நெடுந்தூரம் போவது என்றால் கஷ்டமாகத்தான் இருக்கும்.

அடுத்தபடியாக, திரு மாதா கவுடர் அவர்கள் உதகமண்டலத்தில் சட்டசபையை நடத்தவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். திரு கரிய கவுண்டர் அவர்களும் கேட்டார்கள். அடுத்த வருடத்திலேயே தேர்தல் வரப்போகிறது. ஆதலால் இனிமேல் வரக்கூடிய சட்டசபை அங்கத்தினர்கள், மந்திரி சபை, இவர்கள் ஆலோசித்து இதைப்பற்றி முடிவு எடுக்கலாம் என்கிற கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனேகமாக எல்லா அங்கத்தினர்கள் சொன்ன கருத்துக்களுக்கும் எனக்குத் தெரிந்த அளவுக்கு பதில் சொல்லியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். கடைசியாக ஒன்றை மட்டும் சொல்லி என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். தமிழை உபயோகிப்பதைப்பற்றி இங்கு சொல்லப்பட்டது, குறிப்பாக கனம் நல்லசிவம் அவர்கள் குறிப்பிட்டார்கள். இப்போது ஆங்கிலத்தில் கொடுக்கப்படும் விடையை தமிழில் கொடுத்தால் நன்றாக இருக்கும் என்று தெரிவித்தார்கள். அதை நான் முழுக்க முழுக்க ஒப்புக் கொள்கிறேன். எல்லாவற்றையும் தமிழ் ஆக்குவதற்கு இப்போது நம்மிடம் போதிய அளவு வசதியில்லை, புதிய முறையில் தமிழ் டைப் அடிக்கத் தெரிந்தவர்கள், ஏராளமான பேர்கள் இல்லை. ஆங்கிலத்திலே இருப்பதைத் தவறு இல்லாமல் தமிழிலே எழுதுவதற்கு காரியாலயத்திலே இருக்கக்கூடியவர்களுக்கு இன்னும் போதுமான தகுதி ஏற்படவில்லை. இப்போது ஏற்பாடு செய்திருப்பதெல்லாம் ஜில்லா அடிப்படையிலேதான். ஜில்லா அடிப்படையிலே தமிழிலே நிர்வாகம் இருக்க வேண்டுமென்றுதான் இப்போது ஏற்றுக் கொண்டு நடந்து வருகிறது. அதிலும் இங்கே காரியதரிசிகளாக இருந்து உயர்ந்த பதவியை வகிக்கக்கூடியவர்கள் ஆங்கிலத்திலே அதிக தேர்ச்சி பெற்றவர்கள். அவர்களை தமிழிலே விடை எழுத வேண்டுமென்று சொன்னால் அது முடியாத காரியம். அப்படிப்பட்ட விடைகளை, வேறு யாராவது எழுதினாலும், அது அவ்வளவு சரியாக இருக்காது. ஆகவே, அவர்கள் முடிவு செய்யவேண்டிய காரியமாக இருப்பதாலே, ஆங்கிலத்தில்தான் இருக்க வேண்டியதாக இருக்கிறது. மொழிபெயர்ப்பு செய்வதற்கும் போதுமான சவுகரியமில்லை. கூடிய சீக்கிரத்திலே தமிழில் நடவடிக்கைகள் கிடைப்பதற்காக வேண்டிய ஏற்பாடுகள் எல்லாவகையிலும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று தெரிவிக்கப்பட்டது. அப்படி இருக்க வேண்டுமென்பதுதான் என்னுடைய கருத்தும். நான் கூட கேள்விக்கு ஆங்கிலத்தில் பதில் அளிக்கும்போது, அது சபையிலுள்ள எல்லா அங்கத்தினர்களுக்கும், மற்றுமுள்ள

எல்லோருக்கும் புரியக்கூடிய வகையிலே இருக்க வேண்டுமே என்ற எண்ணம் மனதிலே தோன்றுவது உண்டு. அதனால் இந்தக் காரியங்களை யெல்லாம் கூடிய சீக்கிரத்தில் அமுலாக்குவதற்கான நடவடிக்கைகள் எல்லாம் எடுத்துக்கொண்டு வருகிறோம் என்று தெரிவித்துக்கொள்ளும்போது, தமிழ் நிர்வாகத் துறையிலேயும் சீக்கிரம் வரவேண்டுமென்பதற்காக ஒரு அதிகாரியை அவருக்கு உள்ள முன் அனுபவத்தைக் கொண்டு நியமிக்கப்பட்டு, எவ்வளவு விரைவாக நிறைவேற்ற முடியுமோ, அவ்வளவு விரைவாக செய்யப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதிலும் முக்கியமாக இந்த சட்டசபையிலேதான் முதலில் வரவேண்டும். இப்படிக் கொண்டு வருவதால், இந்தச் சபையிலே இருக்கக்கூடிய அங்கத்தினர்களும், மற்ற மக்களும் நடக்கக்கூடிய நடவடிக்கைகளை யெல்லாம் புரிந்துகொள்ள வசதியாக இருக்கும். அந்த அடிப்படையிலேதான் இதைச் சொல்கிறேன். அந்த அடிப்படையில் எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுக்கப்படும் என்ற உறுதியைத் தெரிவித்துக்கொண்டு, இந்த விவாதத்திலே கலந்துகொண்ட எல்லா அங்கத்தினர்களுக்கும் நன்றி செலுத்திக்கொண்டு எந்தவிதமான குறைகள் இருந்தாலும் கூட, தயவுசெய்து அதைப் பொருட்படுத்தக் கூடாது என்ற முறையிலும், புண்படக்கூடிய விதத்திலே ஏதாவது பேசியிருந்தால், அதற்கு என் மன்னிப்பையும் கேட்டுக்கொள்கிறேன். விவாதத்திலே ஒருவருடைய கருத்தை மற்றவருக்கு பரிமாறிக் கொள்ளுவது மிகவும் அவசியம், அப்படிக் கருத்தைப் பரிமாறிக் கொள்ளுகின்ற முறையிலே கொஞ்சம் குறைகள் ஏற்பட்டாலும் கூட, அதை மனதிலே வைத்துக்கொள்ளாமல் இருப்பது தமிழ் மக்களுடைய பண்பாடு என்பதையும் தெரிவித்துக்கொண்டு, இந்தச் சந்தர்ப்பத்திற்குப் பின்னுவது, வெட்டுப் பிரேரணையை வலியுறுத்தாமல் இருப்பது நல்லது என்று கருதுகிறேன்.

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் தேர்தல் நிதி வசூலிப்பதுபற்றி கருத்து வெளியிட்ட நேரத்தில், நேரடியாக இதிலே எந்தவிதமான கம்பல்ஷனும் அதாவது நிர்ப்பந்தமும் இருக்காது என்று தெரிவித்தார்கள். இரண்டு தினங்களுக்கு முன்பு, சென்னை நகர பஸ் முதலாளிகளை ஓரிடத்தில் கூப்பிட்டு, ஒரு அமைச்சரும் இருந்து, 1 பஸ்ஸுக்கு 1,000 ரூபாய் விதம் தேர்தல் நிதி கொடுக்கவேண்டுமென்று கேட்டதாகச் சொல்லப்படுகிறது. அது உண்மையா என்பதை விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: தயவுசெய்து யாரோ சொன்னதை நம்பி, இப்படி கேட்கவேண்டாம். இந்த மாதிரி கூப்பிட்டு, கொடுத்துத்தான் தீரவேண்டுமென்று சொன்னார்கள் என்ற அந்த முறையே கிடையாது என்பதை உறுதியாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சில சமயங்களில் உங்களுக்கு இப்படிச் சொன்னால் பிடிக்கும் என்ற முறையிலே வேண்டுமானால்

சொல்லி இருக்கலாம். (சிரிப்பு.) எப்போதும் பஸ் முதலாளிகள் கூறினர்கள் என்பதை வைத்துக்கொண்டு இப்படி நம்பிவிடக் கூடாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANTHANAYAKI : லேடி எம் எல். ஏ களுக்கு ஒரு போன் . . . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த வசதியும் கவனிக்கப்படும்.

SRI A. GOVINDASAMI : அமைச்சர் அவர்கள் பேசுகின்ற போது, கட்சி அடிப்படையில் நடப்பதாகக் கூறுவதற்கு ஒரு உதாரணம் கொடுக்க முடியுமா என்று கேட்டார்கள். அந்த அடிப் படையில் நான் ஒரு உதாரணம் கொடுக்க விரும்புகிறேன். அதாவது டூர் புரோகிராம் அனுப்புகின்ற நேரத்தில், அதை ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்கும், மற்றும் அதன் கிளை கமிட்டிகளுக்கும் அனுப்பப்படுகிறதே, அது கட்சி அடிப்படை இல்லையா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்தக் கட்சி புரோ கிராம் அனுப்ப வேண்டுமென்று கேட்டாலும், அதற்கு அனுப்பி வைக்கப்படும். இதிலே கட்சி அடிப்படையில் அனுப்பி வைக்க வேண்டுமென்ற கருத்தே கிடையாது. யார் யார் வேண்டுமென்று கேட்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் அனுப்ப வேண்டுமென்று தான் சொல்லியிருக்கிறோம். திராவிட முன்னேற்றக் கழகம் தங்களுக்கும் அனுப்பிவைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண் டால், அவர்களுக்கும் அனுப்பி வைக்கப்படும். அப்படி அனுப்பினாலும், ஜில்லாவிலே உள்ள காங்கிரஸ் கமிட்டிக்குத்தான் அனுப்புகிறோம். அவர்கள் கிளைக் கமிட்டிகளுக்கு அனுப்பி வைக் கிறார்கள். அந்த முறையிலே யார் கேட்டுக்கொண்டாலும், அனுப்பி வைப்பதிலே எவ்விதத் தடையுமில்லை.

SRI C. N. ANNADURAI : கூட்டங்கள் நடத்துவது பற்றி, தேர்தல் முடிகின்ற வரையில் இப்போதுள்ள தடைகளை நீக்கி, இரவு 12 மணி வரையிலும், மைனர் பஞ்சாயத்தாக இருந் தாலும் இருக்கலாம் என்ற ஒரு ஏற்பாடு செய்துகொண்டால், பிரசார வேலைகளுக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்பது என் னுடைய அபிப்பிராயம். தேர்தல் இல்லாத நேரங்களில் வேண்டு மானல், இரவு 10 , 11 என்றிருக்கலாம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் முன்னேயே இதைப்பற்றி ஆலோசனை செய்யலாம் என்று சொன்னேன். அந்த வகையிலே இதை எப்படிச் செய்வது என்பதைப் பற்றியெல்லாம், யோசனை செய்வதில் எவ்விதத் தடையும் இருக்காது.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri Anbazhagan, pressing his cut motion?

16th March 1961]

SRI K. ANBAZHAGAN : Yes, I am pressing my cut motion Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 1,28,19,200 under Demand VIII —Head of State, Ministers and Headquarters Staff be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,28,19,200 under Demand VIII—Head of State, Ministers and Headquarters Staff.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri V. K. Kothandaraman, pressing his cut motion?

SRI V. K. KOTHANDARAMAN : Yes, I am pressing my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 11,85,000 under Demand IX—State Legislature be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 11,85,000 under Demand IX—State Legislature.'

The Demand was put and carried and the Grant was made.

The cut motion of the hon. Member, Sri V. K. Kothandaraman to Demand X—Elections was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 41,67,400 under Demand X—Elections.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. on Saturday the 18th March 1961.

The House then adjourned.